## நிகரில்லா வலிமைக்கு—ஏலே லோ
## நிர்லான் வலையிருக்கு—லேசுடா லேசு,
## நீடித்த உழைப்புக்கு—ஏலே லோ
## நிர்லான் வலையிருக்கு—வீசுடா வீசு !



# நிர்லான்

## நைலான் மீன்பிடி வலை மணிக் கயிறு

நிர்லான் ஸிந்தெடிக் ஃபைபர்ஸ் & கெமிக்கல்ஸ் லிட்.,

பதிவு அலுவலகம்:
"நிர்லான் ஹவுஸ்"
254—B, டாக்டர் அன்னி பெஸண்ட் ரோடு,
பம்பாய்-400 025

சென்னை கிளை:
300, மோப்ரேஸ் ரோடு
சென்னை—600 018

லின்டாஸ்-NIR-12-203 TM

எழில்மிகு வண்ணங்களில்
அழகுப் பொருளாக ஆக்கப்பட்டு
ஆடிவரும் தென்றலையும்
தவழ்ந்துவரும் பூங்காற்றையும்
உங்களுக்கு அள்ளித்தரும்
ஒரே ஃபேன் வெஸ்டேர்லி

நான்குவித வண்ணங்களில் கிடைக்கிறது



# வெஸ்டெர்லி

ஃபேன்களில் சிறந்தது

தனித்தன்மை வாய்ந்த சோக்
ரெகுலேட்டர் உங்களுக்கு
30% வரை மின்சாரச்செலவை
மிச்சப்படுத்துகிறது.

இன்றே
வெஸ்டேர்லி ஃபேன்களை வாங்கிடுவீர்!

# Moulinex

**MIXER-GRINDER**
**SIMPLE • CONVENIENT**
**HIGH PERFORMANCE**



DOUBLE STAINLESS STEEL JARS

18 Months Guarantee

AVAILABLE
IN 3 DIFFERENT SIZES

Kanara

Stockist — PHONE: 841552
**GAY AGENCY**
10, Arimuthu Achari Maistry Street &
15, North Tank Square, Street,
Triplicane, MADRAS-600 005

**அலை அலையாய் வண்ணங்கள்!**
**அழகழகாய் டிசைன்கள்!**



கலையாத மையிடும் பெண்ணே! **காஞ்சி சில்க்** தரும் பட்டுச்சேலைகளின் தனிச்சிறப்புத்தான் என்னே! காஞ்சி சில்க் பட்டுச் சேலைகள் கலைநயமுடையவை! விலை நியாயமானவை! நீடித்து உழைப்பவை! நிறைவு தருபவை! இன்னும் நவீன மில் துணி வகைகள்! நயமான கைத்தறி ரகங்கள்!

# காஞ்சி சில்க் பேலஸ்

**6/53, பாண்டிபஜார், தி. நகர், சென்னை-600 017**

எந்த சேலைக்கும் மேட்ச் ஆகும் சோளிகள் எங்களிடம் உண்டு.
எந்த சோளிக்கும் மேட்ச் ஆகும் ஸ்லீவ்ஸ் ஏராளம் உண்டு.

RAJATHI

புதுதில்லி சேரும் ஜி. டி. ரயில் நிஜாமு தீன் ஸ்டேஷனை விட்டு நகர்ந்ததும் மேற்கே தெரியும் கான்கிரீட் கோபுரங்கள் காலை நேரத்தில் அழுது வடிகின்றன. தில்லியி லிருந்து புறப்படும் ஜி.டி.யில் மாலையில் பார்க் கும்போது அதே இடம் வண்ண விளக்கு அலங்காரங்களுடன், இனிய(!) இசையுடன் தன் உள்ளே எத்தனையோ அதிசயங்களை வைத்திருப்பதைத் தெரிவித்து அழைக்கக் காணலாம். இதுவே 'பிரகிருதி மைதானம்' என்னும் நிரந்தர காட்சி அரங்கம். கிட்டத் தட்ட சென்னை அண்ணாநகர் அளவு பரந்த இந்த இடமே ஒரு தனிப் பேட்டை. மண்ட பங்களும் சாலைகளும் தடாகங்களும் அரங்கு களும் சிற்றுண்டிச் சாலைகளும் கடை வீதி களும் நிரம்பிய பேட்டை. அவற்றுள் புழங்கு வோர்தான் மாறியபடி இருப்பார்கள்.

கடைசியாக இங்கே நடைபெற்றது நான் காவது உலகப் புத்தகத் திருவிழா. தில்லியில் 'ஹோலி'யை ஒட்டிக் குளிர் விட்டுவிடும்; கம்பளிச் சட்டைகளை உதறிவிடலாம் என் பார்கள். ஆனால் இந்த ஆண்டோ டில்லியில் குளிர் விடவில்லை. அதோடு மழையும் சேர்ந்து கொண்டது. புத்தக விழா இந்தச் சூழ்நிலையில் தொடங்கி நடந்து முடிந்தது.

ஆறு நாடுகளுக்கு அதிகமான புத்தகப் பதிப்பாளர்களின் கடை பல மொழிகளில் விரிக்கப்பட்டிருந்தது. வெளி நாட்டுப் புத்த கங்கள் பெரும்பாலும் பார்வைக்குத்தான் இருந்தன. விற்பனைக்கு அல்ல.

எதையுமே கிண்டலின் எல்லையில் விவ ரிக்கும் நண்பர் டி. வி. எஸ். அதிகாரி ராஜ கோபாலன், ''அடுத்த தலைமுறையில் எல்லா மொழிப் புத்தகங்களுமே காட்சியாகத்தான் இருக்கும், மியூசியத்தில். பழங்காலத்தில் வேலையற்றவர்கள் பொழுதை வீணாக்கிய சாதனம் என்று அதிலே எழுதிவிடுவார்கள்'' என்றார்!



# புத்தகோத்ஸவ்!

ஆனால் இன்று புத்தகத் துறை என்னும் பெரும் தொழிலில் ஈடுபட்டுள்ள பல முத லாளிகளும், அரசாங்க அதிகாரிகளும் தங்கள் வீட்டுக் கல்யாணம் போல ஓடி ஓடிப் பார்த்த வர்களை எல்லாம் கைகுலுக்கி, குசலம் விசா ரித்து, பார்ட்டிகள் நடத்தி, கருத்தரங்கு களில் தமது எண்ணங்களையும் அபிப்பிராய பேதங்களையும் தெரிவித்தபடி இருந்தார்கள்.

ஆமாம். புத்தக விழா என்பது வெறும் விற்பனைச் சந்தையாக மட்டும் இருக்கவில்லை. தேசிய புத்தக டிரஸ்டும், இந்திய அரசு மாகச் சேர்ந்து, புத்தகத் துறை பெரும் புள்ளிகளுடன் நடத்திய இந்த விழாவில் பத்து நாளும் பல்வேறு நிகழ்ச்சிகள் ஒருங்கே நடைபெற்றன. வளரும் நாடுகளில் கிராமப் புற மக்களுக்கான புத்தகங்கள் வெளியிடு வது பற்றி ஒரு சர்வ தேசக் கருத்தரங்கம்; இந்திய எழுத்தாளர் மாநாடு (ஆதர்ஸ் கில்டு ஆப் இந்தியா); நூலகர்கள் மகாநாடு; ஹிந்தி எழுத்தாளர் கூட்டம்; பதிப்பாளர்— புத்தக விற்பனையாளர் சங்க சம்மேளன ஆண்டு மாநாடு என்று பல நிகழ்ச்சிகள். பிரம்மோத்சவ் போல் புத்தகத் துறையில் இருப்பவர்களுக்கு இது ''புத்தகோத்ஸவ்''!

நேஷனல் புத்தக டிரஸ்டின் தலைவர் திரு ஏ. எஸ். டயஸ், புதிதாக டைரக்டர் பதவி ஏற்றுள்ள திரு ஜி. வெங்கட்ராமன் இருவரும் எல்லாருக்கும் சம்பந்தி உபசாரம் விசாரித்தபடி இருந்தார்கள்.

காட்சியில் பணிசெய்து இருந்த ஸ்டால் களுக்குப் பரிசு வழங்கிய கல்வி அமைச்சகக் காரியதரிசி திரு சபாநாயகம் ஊழியர்களைப் பாராட்டியது வித்தியாசமாகவும் பெருந் தன்மையுடனும் இருந்தது.



# புத்தகக் காட்சியை விட சிற்றுண்டிச்சாலையில் கூட்டம் அதிகம்!

இந்தத் தில்லித் திருவிழாவில் தமிழ் முகங்களும் தமிழ்ப் பேச்சும் நிறையத் தெரிந்தன. ஒவ்வொரு மொழிக்காரரும் இப்படியே சொல்வார்களோ என்னவோ. ''இதற்கு முன்பு 1976ல் ஒரு முறையும் 1978ல் ஒரு முறையும் நடந்த உலகப் புத்தகக் காட்சியில் நிறையக் கூட்டம் வந்தது. இப்போது மார்ச்சு மாதம். அதோடு மழை: மேலும் பரீட்சை காலம், அப்புறம்....'' என்று கூட்டம் வராததற்குத் தாம்தான் சமாதானம் சொல்லியாக வேண்டும் என்பது போல யாரிடமோ சீரியஸாகச் சொல்லிக் கொண்டிருந்தார், திரு தம்பி சீனிவாசன். இந்தப் புத்தக விழா ஆலோசனைக் குழுவில் ஓர் உறுப்பினராம்.

விற்பனைக்கு என்று கடைகள் இல்லாமல் தனியே எல்லா மொழிகளிலும் கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளில் வெளியான எல்லாப் புத்தகங்களையும் ''தேசியக் காட்சி'' என்ற தலைப்பில் வைத்திருந்தார்கள் நேஷனல் புத்தக டிரஸ்ட்காரர்கள். அதன் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த திரு 'ஆதவன்' சுந்தரம், தமிழ் எழுத்தாளர்களை அழைத்துப் போய்த் தமிழ்ப் பிரிவைக் காட்டிக்கொண்டிருந்தார். இந்த ஆண்டு குழந்தை இலக்கியப் பிரிவு எனத் தனியாகவும் ஒரு காட்சி அமைத்திருந்தார்கள்.

ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி திறந்து வைத்த இந்தத் திருவிழாவை ஒரு நாள் மிகவும் சாதாரணமாக பிரதமர் இந்திரா வந்து பார்வையிட்டுப் போனார். கிரிக்கெட் ஆட்டக்காரர் கபில்தேவ் வந்துவிட்டுப் போனதைப் பலரும் கவனிக்கவேயில்லை.

இந்தக் காட்சியில் எவ்வளவு வியாபாரமாயிற்றோ, தெரியாது. புத்தகங்களுக்கு இடையே சிற்றுண்டிச் சாலையில்தான் கூட்டம் அதிகம். புத்தகங்களுக்கு விலை குறைத்து விற்றார்கள் என்றால், இங்கே விலை கூடியிருந்தது. ''ஆன்டி, 'பேல்பூரி' நன்றாக இருக்கிறது. இன்னொரு நாள் புத்தகக் காட்சிக்கு அழைத்து வாயேன்'' என்று ஒரு குழந்தை தன் அத்தையைக் கேட்டுக் கொண்டிருந்தது, பஸ் நிலையத்தில்! —[illegible]

## ஆஸ்திக அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்

சென்னை, கிண்டி, ரேஸ் வியூ காலனியில் **ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகள்** அனுக்கிரஹித்து, தொடங்கப்பட்டிருக்கும், **ஸ்ரீ கோதண்டராமர், ஸ்ரீ ஆஞ்சநேயர்** திருக்கோயில்கள் திருப்பணி ஆஸ்திக பெருமக்களின் பொருளுதவி கொண்டு நடைபெற்று வருகிறது.

மேற்படி சந்நிதிகளில் ஆகம விதிப்படி விக்கிரகப் பிரதிஷ்டைகள் செய்து, **கும்பாபிஷேக விழா** வருகிற ரௌத்ரி ஸ்ரீ சித்திரை மாதம் 7ந்தேதி **(21-4-'80) திங்கட்கிழமையன்று** நடைபெற இருக்கிறது. இதைக் கண்ணுறும் ஆஸ்திக அன்பர்கள் மேற்படி திருப்பணிக்கு தங்களால் இயன்ற பொருளுதவியை கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைத்து, **ஸ்ரீராம, ஸ்ரீ ஆஞ்சநேய மூர்த்திகளின்** கிருபைக்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

தலைவர்,
**ஸ்ரீ கோதண்டராம பக்த ஜன சபா**
பதிவு எண் 149/77
நெ. 4, மூன்றாவது தெரு, ரேஸ்வியூ காலனி,
கிண்டி, சென்னை-600 032

# அன்னையிடம் அடைக்கலம்





## பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

**தமிழ்நாடு, ஸ்ரீ ராமகிருஷ்ண - விவேகானந்த பக்தர்கள் மகாநாடு அண்மையில் மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் சிறப்பாக நடந்தேறியது. ஸ்ரீ அவினாசிலிங்கம் செட்டியாரும், சுவாமிகள் தன்மையானந்தர், சர்வக்ஞானந்தர், தபஸ்யானந்தர் முதலியோரும் பங்கு பற்றினர். ராமகிருஷ்ணரின் கருத்துக்களை இவ்விதழில் பிரசுரிப்பதன் மூலம் மாநாட்டின் நோக்கத்துக்குத் துணை செய்கிறோம். —ஆசிரியர்**

எனக்குத்தெரிவது எனக்கு எதுவுமே தெரியாது என்பதுதான். சில சமயங்களில் நான் ஆண்டவனை நல்லவன் என்று நினைக்கிறேன்; சில சமயத்தில் அவன் பொல்லாதவனாகவும் எனக்குத் தோன்றுகிறான். அவனைப் பற்றி நான் என்ன அறிய முடியும்?

எவர்தான், என்றுதான் ஆண்டவனை அறிய முடியும்? நான் அதற்கு முயலுவது கூட இல்லை. நான் செய்வதெல்லாம் அவனை ''அம்மா!'' என்று கூப்பிடுவதுதான். அம்மா எப்படி இஷ்டப்படுகிறாளோ அப்படியே செய்யட்டுமே! அவளுடைய சங்கல்பம் இருந்தால் நான் அவளை அறிந்து கொள்வேன்; ஆனால் அவள் வேறு விதமாகத் திருவுள்ளம் கொள்வாளேயானால் நான் அறியாதவனாகவே இருப்பதில் ஆனந்தம் காண்பேன்.

என் ஸ்வபாவம் பூனைக் குட்டியுடையது. அது ''மியாவ் மியாவ்'' என்று கத்துவதோடு சரி; பாக்கி யெல்லாவற்றையும் அதன் தாய்க்கே விட்டுவிடுகிறது. தாய்ப் பூனை குட்டியை ஒரு சமயம் சமையலறையில் கொண்டு போய்ப் போடுகிறது: இன்னொரு சமயம் யஜமான் படுக்கையில் கொண்டு போய்ப் போடுகிறது.

சிறு குழந்தைக்கு வேண்டியதெல்லாம் அம்மா மட்டும்தான். அம்மாவிடம் பணம் காசு உண்டா என்ற சமாசாரங்கள் அதற்குத் தெரியாது. தெரிந்துகொள்ள அது ஆசைப் படுவதுகூட இல்லை. 'எனக்கு ஒரு அம்மா இருக்கா. நான் ஏன் கவலைப்படணும்?' என்பதுதான் அதற்குத் தெரிந்தது. ஒரு வேலைக்காரியின் குழந்தைக்கு ''நம் அம்மா'' என்று அவளைத் தெரிகிறது. யஜமான் வீட்டுப் பிள்ளையோடு அதற்குச் சண்டை வந்தால், ''எனக்கு அம்மா இருக்காளாக்கும்; அவ கிட்டே சொல்லிடுவேன்'' என்கிறது! என் போக்கும் இப்படிப்பட்ட குழந்தையுடையதுதான்.

ஹே அம்மா! ப்ரணவ ஸ்வரூபமே! உன்னைப் பற்றி ஜனங்கள் எத்தனை விதமாகச் சொல்கிறார்களடி! ஆனால் எனக்கு அதில் எதுவும் புரியவில்லை. அம்மா, எனக்கு எதுவுமே தெரியாது. உன் பாதத்தில் அடைக்கலம் புகுந்தேன். உன்னிடமே காப்புத் தேடி வந்திருக்கிறேன். ஹே அம்மா! உன் பாத தாமரைகளில் பரிசுத்த அன்பே—பிரதி ஏதும் எதிர்பாராத அன்பே — நான் வேண்டுவது. இன்னொன்று அம்மா, லோகத்தை யெல்லாம் மோஹித்து மயக்கும் உன் மாயையால் என்னை ஏமாற்றிவிடாதே! உன் ரக்ஷணை நாடினேன். உன்னிடமே சரண் செய்தேன்.

(அனுப்புனர்: ரா. கணபதி)

---

''பொதுவாகவே நான் இடது பக்கத்திலிருந்து வலது பக்கமாகத்தான் படிப்பேன்; ஒரே ஒரு இடத்தில் மட்டும் வலது பக்கத்திலிருந்து இடது பக்கமாகப் படிப்பேன்.''

''உருது தெரியுமா?''

''இல்லே! ஓட்டல் மெனு கார்டைச் சொல்கிறேன்.''

—ராமு




குண்டுராவ்
மண்ணின் மைந்தர்கள் கொள்கை
இதென்ன போட்டிக் கச்சேரி! ஒரே நாராசம்! நிறுத்துங்க!
உங்க பக்க வாத்தியம் மட்டும் என்ன வாழுதாம்?
இளைய பெருமாள்
இந்திரா பாணி ஜனநாயகத்திற்கு பெருமாளே சாட்சி!
உங்க கௌரவம் என்ன.. நீங்க என்ன.. எடுத்ததுக் கெல்லாம் டெல்லி டெல்லின்னு..
உடன் பிறப்பு
... அதாவது.. நீங்க டெல்லியிலேயே இருந்துகிட்டு அப்பப்ப தமிழ்நாட்டுக்கு வந்தா போதுமே...

# செய்திகள், வாசிப்பது 'செம்பியன்'

**பிரதமரின் கருணை**

"இந்தத் தேசத்தில் பார்வையற்றவர்களை யாரும் கவனிப்பதே இல்லை" என்று இனி யாரும் முணுமுணுக்க முடியாது! புது தில்லியில் பார்வையற்றவர்களைப் போலீஸார் நன்றாகக் 'கவனித்து'க் கொண்டார்கள்! அந்தகர் மீது தடியடிப் பிரயோகம் நடத்தி ரத்தம் சிந்த வைத்தார்கள். அவர்களில் பலர் ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இருவர் போய்ச் சேர்ந்த இடமே தெரியவில்லை! தேடப்பட்டு வருகிறார்கள்! "உலக ஊனமுற்றவர் தினம்" சர்வ தேசங்களிலும் அனுசரிக்கப்பட்ட நாளன்று குருடர் மீது தடியடிப் பிரயோகம் நடத்தியது போலீஸாரின் முன்யோசனைக்குச் சான்று!

"பிற்பட்ட வகுப்பாருக்கு இணையாக எங்களுக்கும் விசேஷ சலுகைகள் கொடுங்கள்" என்ற கோரிக்கை மனுவைப் பிரதமரிடம் சமர்ப்பிக்க முன்னறிவிப்புச் செய்துவிட்டு ஊர்வலமாக வந்ததற்குத்தான் இந்த மரியாதை கிடைத்தது பார்வையற்றவர்களுக்கு.

காருண்யமிக்க பிரதமர் உடனே விசாரணைக் கமிஷன் நியமித்து விட்டார். எதற்குத் தெரியுமா? தடியடிப் பிரயோகம் நடந்தது பற்றி விசாரிக்கஅல்ல; நடந்ததாகச் **சொல்லப்படுகிறதே** அது பற்றி விசாரிக்க! அத்துடன் நில்லாது, பொதுவாகவே போலீஸாரின் நடத்தை பற்றி மனோதத்துவ ரீதியாக ஆராயவும் ஒருவரை நியமித்திருக்கிறார்! த்சொ, த்சொ! யாருக்கு வரும் இந்தச் சாமர்த்தியம்! ஆணி வேரையே அல்லவா கெல்லிப் பார்க்கப் போகிறார் பிரதமர்!

உ. பி. யில் போலீஸார் அத்துமீறி நடந்து கொண்டால் அங்கே போலீஸாரின் நடத்தை பற்றிய மனோதத்துவ ஆராய்ச்சிக்கு அவசியமில்லை. அங்கேயுள்ள எதிர்க்கட்சி அரசு ஆட்சி புரியவே லாயக்கற்றது என்று கூறி டிஸ்மிஸ் செய்து விட வேண்டியதுதான். ஆனால் டில்லியில் பிரதமரின் இல்லத்துக்கு அருகிலேயே கூப்பிடு தூரத்தில் போலீஸார் அத்துமீறினால் பிரதமரை டிஸ்மிஸ் பண்ணுவது யார்? பேச்! மூச்!

போலீஸாரின் நடத்தை குறித்து மனோதத்துவ ரீதியாக ஆய்வு நடத்துவதுடன் மூன்றிலிரண்டு பங்கு மெஜாரிட்டி உருவாக்கும் யதேச்சாதிகார மனப்பான்மை பற்றி ஆராயவும் ஒரு குழு நியமிக்கலாமே!

**முத்தப் பிரச்னை!**

தகவல் ஒலிபரப்பு மந்திரி வஸந்த் ஸாதே முன்பு இன்றுள்ள மிகப் பெரிய பிரச்னை முத்தக் காட்சியைச் சினிமாவில் அனுமதிப்பதா வேண்டாமா என்பதுதான்!

இவர் மட்டுமென்ன, இவருக்கு முன்பு இருந்த பல தகவல் ஒலிபரப்பு அமைச்சர்களும் இதே பிரச்னை குறித்து மண்டையைக் குடைந்து கொண்டிருக்கிறார்கள். வஸந்த் ஸாத்தே தைரியத்தை யெல்லாம் திரட்டிக் கொண்டு, "இயற்கைக்கு முரணான காதல் காட்சிகளையும், ஆபாச நடனங்களையும் கற்பழிப்பு' வன்முறைக் காட்சிகளையும் அனுமதிக்கும்போது இயல்பான ஒன்றான முத்தத்தை ஏன் திரைப்படத்தில் அனுமதிக்கக் கூடாது?" என்று சில தினங்களுக்கு முன் கேட்டார். பிறகு, யார் என்ன சொன்னார்களோ, என்னவோ, "நான் முத்தக் காட்சிகளுக்கு ஆதரவாகப் பேசவில்லை; அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை" என்று தற்போது ஜகா வாங்கிவிட்டார்.

ஸாதேயின் முதல் அறிவிப்பை யொட்டி அவருக்கே ஒரு ஹீரோ கனை இருப்பதாகச் சிலாகித்துக் கூறிய படாதிபதிகள், அவர் இப்போது பின்வாங்கியதில் மனமுடைந்து போயிருக்கிறார்கள்.

வஸந்த் ஸாதேயின் தலை வேதனையும் குழப்பமும் நீங்க ஒரே வழி, அவரை ஆசார்ய ராஜ்நீஷ் ஆசிரமத்துக்கு அனுப்பி வைப்பதுதான். நாலு நாட்கள் இருந்துவிட்டு வந்தால் போதும். அப்புறம் திரையில் 'முதலிரவுக் காட்சியைக் கூட முழுக்கவே காட்டலாம்' என்பார் உறுதியாக!

**"ஸெக்ஸ் தெய்வம்!"**

ஆசார்ய ராஜ்நீஷைப் பொறுத்த மட்டில் உலகிலுள்ள பிரச்னைகளெல்லாம் ஒரே ஒரு காரணத்தினால்தான் ஏற்படுகின்றன. அது ஸெக்ஸ்! உலகிலுள்ள பிரச்னைகளெல்லாம் தீர ஒரே ஒரு மார்க்கம்தான் உண்டு: ஸெக்ஸ்! இன்னும் தெளிவாகச் சொல்வதென்றால் ஸெக்ஸை அவர் தெய்வமாகவே கொண்டாடுகிறார். அவர் கருத்துப்படி மூன்று மணி



1980 மார்ச் 30
சித்தார்த்தி பங்குனி 17
மலர்: 38 இதழ்: 35



கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

நேரம் தூக்குப்பிடித்தவன் மோட்ச சாம்ராஜ்யத்தை அடைந்தவனாகிறான்!

ராஜ்நீஷுக்குச் சாதகமாக இந்து மதத்திலேயே வழிபாடு முறைகள் இருந்து வந்துள்ளன என்று வாதாடுவோர் இருக்கத்தான் செய்வார்கள். இவர்கள் கொனாரக்கையும் கஜுராஹோவையும் ஆதாரம் காட்டி வாத்ஸ்யாயனரை துணைக்கு அழைத்துக் கொள்வார்கள். இவற்றை மறுக்க முடியாது போகலாம் என்றாலும் அன்றிலிருந்து இன்றுவரை பலநூறு ஆண்டுகளில் நாம் நாகரிக முன்னேற்றம் அடைந்து வந்திருப்பதை ஒப்புக் கொள்ளப் போகிறோமா இல்லையா? ராஜ்நீஷ் போன்ற போலி யோகிகள் கடிகாரத்தைப் பின் நோக்கி ஓடவைத்துக்கற்கால அநாகரிகத்துக்கு நம்மை அழைத்துச் செல்லப் பார்க்கிறார்கள்.

ஸெக்ஸ் புனிதமானது, அழகானது, ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அதனை ராஜ்நீஷ் போன்றவர்கள் ஆபாசமானதாக்குகிறார்கள். தார்மீகக் கோட்பாடுகளுக்கு உட்படும்போது ஸெக்ஸ் மகிழ்ச்சி தருகிறது. அதில் அவமானப்பட ஏதுமில்லை. ஆனால் எல்லைகளை, வரம்புகளை மீறும்போது தாற்காலிக இன்பத்துக்குப் பின் அதுவே அருவருப்பானதாகிறது. உடல் மனம் இரண்டுக்கும் துயரமளிக்கிறது.

உபநிஷத்தின் சாரம் என்ன என்று ராஜாஜி கூறுவதை இந்த வாரம் அவரது வரலாற்றுப் பகுதியில் காணலாம். படித்து நல்லறிவு பெறுவோம்.

### போதும், போதும்!

"கல்கி நேயர்கள் எனக்கு அளித்த உதவிக்கெல்லாம் நன்றி" என்கிறார் குமாரி கவர்ணலதா. (16–3–80 இதழ் தலையங்கம்– கடுகத்தனை கேள்வி; மலையத்தனை உதவி) "எனக்குத் தேவைப் பட்ட அளவு உதவி விட்டீர்கள்; போதும். இனி யாரும் எனக்குப் பணம் அனுப்ப வேண்டாம். கல்கியின் கருணை மகிழ்ந்த உதவியை என்றென்றும் மறக்க மாட்டேன்."

### "கோவலன் - ஒரு முட்டாள்!"

புத்தனேரி சுப்பிரமணியம் எழுதிய கவிதைகள் தொகுப்பு நூல் ஒன்று அண்மையில் விழாவில் வெளியிடப்பெற்றது.

கவிதை என்ற சொல்லில் கவி, விதை, கதை என்ற மூன்று வார்த்தைகள் உள்ளடக்கமாக இருப்பதைக் கவிஞர் சுட்டிக் காட்டுகிறார். ஆக, சொல்லழகு (கவி) கருத்து (விதை) சொல்லும் விதம் (கதை) ஆகிய மூன்றும் கவிதையில் இருக்க வேண்டும். ஒரு கருத்தைச் சொல்லழகால் இழையபடக் கதைபோல் விருவிருப்பூட்டும் விதம் கூறுவது கவிதை.

இன்னொரு வார்த்தையும் இதனுள் இருப்பதை மறந்துவிட்டார் புத்தனேரி: "தை!" மூன்றையும் ஒன்று சேர்த்துத் தைத்து அளிக்கிறான் அல்லவா கவிஞன்!

புத்தகத்தில் "கோவலன் ஒரு முட்டாள்!" என்ற கவிதை ரசமானது:

ஒற்றைச் சிலம்பினை விற்றிடக்
 கோவலன் ஏன்விரைந்தான் — பின்
ஊருக்குள் யாருக்கும் ஐயம்வரும்
 இதை ஏன் மறந்தான்?
கம்மல் இரண்டினில் ஒன்றினை
 வாங்கிட யார்வருவார் — வண்டிக்
காலை இரட்டையில் ஒன்றைமட்
 டும்பெற யார் துணிவார்?
ஊழ்வினை தான்முந்திக் கோவலனை
 மட்டி யாக்கியதோ — அந்த
ஒப்பற்ற காவிய நாயகனின்
 உயிர் போக்கியதோ?
சூழ்வினைச் சிலம்பு கண்ணகி
 வீரத்தைக் காட்டியதோ? — இங்கு
தூய சிலப்பதி காரம்
 நிலைபெற நாட்டியதோ?

"என்றும் இளமை" — கிடைக்குமிடம்: "தமிழ் குடில்" 14, செனடாப் முதல் தெரு, சீதம்மா எக்ஸ்டென்ஷன், சென்னை–600018. விலை ரூ. 12

### வாக்காளர் திருவுள்ளம்!

"என்ன தமிழகத்தில் தேர்தல் முடிவு எப்படி இருக்கும்?" என்று கேட்டார் ஒரு தொழிலதிபர்.

"எல்லோரும்தான் அதிமுகவை விட்டுத் திமுகவுக்கு ஓடுகிறார்களே! எம். ஜி. ஆர். அம்போ என்று தனித்து விடப்படுவார் போலிருக்கிறதே" என்றேன்.

"முன்பு இந்திரா கூடத்தான் இப்படித் தனித்து விடப்பட்டார். எல்லாரும் ஜனதாவைப் பார்க்க ஓடினார்கள். அவர் திரும்பவும் பதவிக்கு வரவில்லையா என்ன?" என்று அந்தத் தொழிலதிபர் புன்னகையுடன் கேட்டார்.

வாஸ்தவம். வாக்காளர் திருவுள்ளம் வோட்டுப் போடுகிற தினத்தில் எப்படி யார் பக்கம் திரும்புமோ, யார் கண்டார்கள், இப்போதைக்கு அநியாயப் பதவி நீக்கம் காரணமாகவும், ஒரு கஷ்ட நிலைமையில் சகாக்களால் கைவிடப்படுவதன் காரணமாகவும் எம். ஜி. ஆரிடம் மக்களுக்கு அபரிமிதமான அனுதாபம் பெருகி யிருப்பதாகத் தான் சொல்லிக் கொள்கிறார்கள்.


ஹேமா ஆனந்ததீர்த்தன் எழுதும்
கல்கி
ஏப்ரல் 13²
சித்திரைச்
சிறப்பிதழில்
ஆரம்பம்
''ஒரு கதை அல்லது நாவலை
லட்சக்கணக்கான மக்கள் ஆர்வத்
தோடு படித்து, தங்கள் இன்னல்
களை மறந்து இன்புறுவார்களே
யானால் அது கதாசிரியன் அவர்
களுக்குச் செய்த சேவை என்று
ஏன் எடுத்துக்கொள்ள கூடாது?''
—ஹேமா ஆனந்ததீர்த்தன்




செட்டிநாட்டில், முதலில் பிறக்கும் ஆண் குழந்தைக்கும் பெண் குழந்தைக்கும் "புதுமை" என்று ஒரு விழா நடத்துவார்கள். சாதாரணக்குடும்பத்தில் கூட இம்மாதிரியான விழாக்களுக்கு இரண்டாயிரம் மூவாயிரம் ரூபாய் செலவாகும். இருபது ஆண்டுகளுக்கு முன்னால் அடிக்கடி நடைபெற்ற இந்த விழாக்கள் இப்போது அபூர்வமாகத்தான் நடைபெறுகின்றன.

இது வீண் செலவு என்று கருதி முதல் குழந்தைகள் அழகப்பனுக்கும் அலமுவுக்கும் 'புதுமை' நடத்தவேண்டாம் என்று முடிவு செய்தார் அவர். உறவினர் பலர் வற்புறுத்தியும் கூட அவர் இசையவில்லை.

அந்த நேரத்தில் அவருடைய கவிதைகளின் தொகுப்பைப் படங்களுடன் வெளியிட்டால் மிகவும் நன்றாக இருக்கும் என்று நண்பர் அவருடைய ஆசையைத் தூண்டி விட்டார்.

ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு படம், உள்ளே வழுவழுப்பான தாளில் சில படங்கள். கனத்த மேல் அட்டை. மூவண்ண முகப்பு இப்படிக் கற்பனை விரிந்தது. அவர்கள் கற்பனைப்படி வெளியிடுவதானால், அந்த நாளிலேயே நாலைந்து ரூபாய் விலை வைக்க வேண்டும். விற்பனையாவது சந்தேகம்.




(தொடரும்)

ஒரு நாள் இரவு திடீரென்று அவருக்கு ஒரு பிரமாதமான யோசனை தோன்றியது. குழந்தைகளுக்குப் "புதுமை" செய்யாமல் மீந்து வைத்த பணத்தை இதில் செலவிட்டால் என்ன?

நினைவு செயலாயிற்று. அப்படி தயாரான நூல் தான் 135 பாடல்களுடன் குழந்தைகளுக்காக உருவான "மலரும் உள்ளம்". தம்முடைய குழந்தைகளுக்குப் "புதுமை" நடத்தாமல் குழந்தை இலக்கியத்துக்குப் புதுமை சேர்த்தவர் — அழ. வள்ளியப்பா. தூண்டி விட்ட நண்பர் ரத்தினம்.

இதுவரையில் அந்த மலரும் உள்ளம் நூல் 40,000 பிரதிகள் விற்பனையாகிப் பத்தாவது பதிப்பு வெளிவரவிருக்கிறது!

—யெஸ்பால்

✖

ஆஸ்கார் வைல்டிடம் ஒரு பத்திரிகை ஆசிரியர் அவர் விரும்பும் சிறந்த நூறு நூல்களின் பட்டியலை அனுப்பும்படி கேட்டுக் கொண்டார்.

தம்மால் அது இயலாது என்று மறுத்து விட்ட ஆஸ்கார் வைல்ட் அதற்காகக் கூறிய காரணம்: "நான் இதுவரையில் ஐந்து புத்தகங்கள் மட்டுமே எழுதியிருக்கிறேன்!"

—கோ. தீபா

# உவகை அளித்த 'உமா'

● உமாபதி அவர்களின் வாழ்க்கை பற்றிய விவரங்களை அழகாக, ரத்தினச் சுருக்கமாக அளித்ததற்கு நன்றி. உமாபதி நகைச் சுவைச் சிறப்பிதழை மிக மிக அருமையாக உருவாக்கியிருக்கிறார்.
சென்னை-5 எஸ். வி. ராஜசேகர்

● கல்கி வெளியிட்டுள்ள சிறப்பிதழ்களுக் கெல்லாம் சிறப்பிதழாக இந்த இதழ் அமைந் துள்ளது! வெறும் புகழ்ச்சி இல்லை — உண்மை யிலேயே நல்ல Collection.
திருச்சி-1 அலெக்ஸ்

● அட்டைப் படம் வெகு ஜோர். நகைச் சுவைச் சிறப்பிதழுக்குத் தகுந்த அட்டைப் படம் வரைந்த 'உமா'வுக்கு வாழ்த்துக்கள்.
சென்னை-33 கேயார்வி

● 'ஓடும் ரயிலில் ஓர் உரையாடல்' படித் துச் சுவைத்தேன். நாலு மாமாங்கத்துக்கு முன்னரே இப்படி ஓர் அலாதியான எழுத்து நடை என்றால், இப்போதும் கல்கி இருந்திருந்தால்....! சுந்தா நன்றாகவே செலக்ட் செய்திருக்கிறார்.
மதுராந்தகம் எம்.வி. குமார்

● எத்தனை மாமாங்கமானாலும் சுவை குன்றாத கல்கியின் நகைச் சுவைக்கு, சொல்லி வைத்தாற்போல் சோவின் 'ஆமாம்—இல்லை' ஈடு கொடுத் திருப்பது வியப்பைத் தரு கிறது. பாராட்டுக்கள்.
பெங்களூர்-5 அ. குமார்

● ''ஆமாம்-இல்லை''சோவின் கட்டுரையைப்படித்து மண்டை கழன்று விட்டது. நல்ல வேளை இரண்டு பக்கத்தோடு கட்டு ரையை முடித்தார்! இல்லாவிட்டால் சோ வுடன் சேர்ந்து கொண்டு நாங்களும் கீழ்ப் பாக்கத்தை நோக்கி ஓட வேண்டியதுதான்!
திருச்செந்தூர் ஆ. சீனிவாசன்

● நகைச் சுவைச் சிறப்பிதழ் என்று இந்த வாரம் போட்டு, சிரிக்கவும் வைத்துவிட்டு, தலையங்கத்தை மட்டும் அழுகை வருவது போல் எழுதிவிட்டீர். உதவி செய்ததோடு மற்றவர்களையும் உதவி செய்ய வைத்துவிட் டீர்.
திருச்சி அரசு நாராயணன்

● ஸ்வர்ணலதாவுக்குக் 'கடுகளவு' இடம் கல்கி ஒதுக்கிய புண்ணியம் அவருக்காகத் தலை யங்கமே ஒதுக்குவதில் முடிந்தாலும் ஈரமுள்ள நெஞ்சுடன் நாட்டுக்கு ஒரு டாக்டர் உரு வாவதில் கல்கியின் பங்கு பெருமைக்குரியது.
பொன்மலை என். பாலு

● ''கடுகத்தனை கேள்வி மலையத்தனை உதவி'' என்ற தலையங்கத்தைக் கண்டேன், சுவர்ண லதாக்கள் போன்று எத்தனையோ மாணவிகள் உள்ளனரே இவர்கள் நிலையெல்லாம் சொல்லி உதவிப் பணம் திரட்ட முன்வருபவர் யார்?
சென்னை இரா. தமிழேந்தி

● செய்திகள் வாசிப்பது செம்பியன் one or two pieces very good. ஆனால் பெருமளவு சிரிப்புப் பகுதிகள் ரொம்ப 'சப்'!
கம்பரஸம்பேட்டை பி. ஸ்ரீராம்

● ஏழு நடிகைகளின் சிரிப்புப் படத்தைப் போட்டு எதற்காகச் சிரிக்கிறார்கள் என்று கேள்வி கேட்டுவிட்டு ஜோக்கையும் வேறு பிரசுரித்து இருக்கிறீர்கள். ஜோக்கைப் படித் துச் சிரிப்பே வரவில்லை. கிச்சு கிச்சு மூட்டும் மிஷின் ஒன்று இருந்தால் கல்கியுடன் இலவச மாக அளிக்கவும்.
ராசிபுரம் ஆர். ஜே. பாரத்மணி

● கடைசிப் பக்கத்தில் 'அன்னை சாலையில் ஒரு சுரங்கப்பாதையருகே' என்ற தலைப்பில் கார்ட்டூன் ரசமாக இருந் தாலும் விரசமும் ஒரிடத்தில் எட்டிப்பார்ப்பதால்'ஒரு குடம் அமிர்தத்தையும் ஒரு துளி விஷமானது கெடுத்துவிடும்' என்பதற்கேற்ப உள்ளது.
போடிநாயக்கனூர்
எஸ். சையது முகமது

● சுருளியின் அமனி அப் பப்பா! வயிற்றைப் புண்ணாக்கி விட்டது சார். சீரியஸ் எழுத் தாளர்களின் நகைச் சுவைக் கட்டுரைகள் பலே ஜோர்! கல்கியின் நகைச் சுவை உரை யாடலைப் படிக்க வாய்ப்பளித் ததற்கு ஸ்பெஷல் தேங்க்ஸ்!
சென்னை-5 ஹரிதன்




## வட்டமேஜை

● ஆட்டிப் படைக்காத ஆவி வடிவம், அன் புருவான ஆவி வடிவம் என்ற தலைப்புக் கொடுங்கள். என் சுவாரஸ்யமான தகவலை அனுப்புகிறேன்.
கோட்டையூர் சி. சிதம்பரம்

● சுதந்திரப் போராட்ட காலத்தில் திருமதி மேயோ அவர்கள் இந்தியா பற்றி ஒரு புத்த கம் எழுதினார். இல்லாதது ஒன்றையும் அவர் எழுதவில்லை. ஆனால் நம் நாட்டின் மாசு படிந்த விஷயங்களை மட்டும் தொகுத்து இந்திய நாட்டைக் கேவலமாகச் சித்திரித் தார். காந்தியடிகள் அப்புத்தகத்தை ஒரு 'சானிடரி இன்ஸ்பெக்டரின் அறிக்கை' என வர்ணித்தார்.

சமூக நலம் கருதியும், எழுத்துத் தரம் கருதியும் ராஜம் கிருஷ்ணன் எடுத்திருக்கும் நிலைக்காகவும் அவர் தரும் வாதங்களுக்காக வும் தமிழ் சமுதாயம் அவருக்கு மிகவும் கடன் பட்டுள்ளது.
சென்னை-88 இ. ஸ்ரீனிவாசன்

# அம்மா

சிவசங்கரி

7

பதினொரு மணி சுமாருக்கு டோரா போன் பண்ணினாள்.

"வித்யா, டோரா ஹியர்—"

"ஹாஸ்பிடலிலிருந்து எப்போது வந்தாய் டோரா? ஜென்னி எப்படி இருக்கிறாள்?"

"ரொம்ப மோசமாய்த்தான் இருக்கிறாள் வித்யா. ஆழமான கோமாவில் இருக்கிறாள். மண்டையில் சரியான அடி. முகம் பெரிசாய் வீங்கிப் போயிருக்கிறது. மூளையில் எந்தவிதமான பாதிப்புகள் இருக்கும் என்று இன்னும் சரியாய்ப் புரியவில்லை. வயிற்றில் டயர் ஏறியதால் கிட்னிகளும் அடிபட்டிருக்கின்றன...."

"டாக்டர் என்ன சொல்கிறார்?"—

"ஜென்னி இன்னும் உயிரோடு இருப்பதே அதிசயம் என்று சொல்கிறார்... இன்று காலையில் டாக்டர் போனில் என்ன கூறினார் தெரியுமா, வித்யா? 'உயிரோடு உங்கள் பெண்ணைப் பார்க்க வேண்டுமானால் இப்போது வந்துவிட்டுப் போங்கள். நேரம் செல்லச் செல்ல எதுவும் ஆகலாம்' என்று. அவர் சொன்னபடி ஜென்னியை உயிரோடு பார்த்துவிட்டோம் என்கிற திருப்தி எங்களுக்கு. நினைவு இல்லாவிட்டாலும், உடம்பில் உயிர் இருப்பது நிஜம்தானே..."

டோராவின் குரல் தழுதழுக்கிற மாதிரி வித்யாவுக்குத் தோன்றியது.

"அங்கு நான் வந்து பேசிக் கொண்டிருப்பது உன் மனசுக்குத் தெம்பாக இருக்கும் என்றால், வரட்டுமா டோரா?"

"வேண்டாம் வித்யா. குழந்தைகள் பள்ளியிலிருந்து வருவதற்குள் நான் அரை மணி படுத்துக்கொள்ள விரும்புகிறேன். ராத்திரி முழுவதும் தூங்காததால் மண்டை கனமாய் இருக்கிறது. கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொண்டால்தான் மாலையில் திரும்ப ஜென்னியைப் பார்க்க என்னால் முடியும்..."

போனை வைத்துவிட்டுத் திரும்பிய வித்யாவுக்கு ஜென்னியை நினைத்து ஒரு பாட்டம் அழுதால் தேவலை போல் இருந்தது.

மூளை அடிபட்டுப் போயிருக்கிறதா?

கிட்னி கூடவா?

எந்த நிமிஷமும் எதுவும் ஆகலாமா?

கடவுளே — என்ன அநியாயம் இது?

நேற்றுக் காலை பள்ளிக்குப் போகு முன், பக்கவாட்டுக் கதவு வழியாக உள்ளே வந்து 'இன்று பிரேக் பாஸ்ட் என்ன



> பெண்ணின் வாழ்வு என்பது கணவனின் அன்பே.
>
> - ஜெர்மானிய மொழி

வித்யா?'' என்று கேட்டு ''ப்ரெட் அண்ட் எக் ஜென்னி'' என்று நான் பதில் சொன்னதும் ''ஹக்—'' என்று முகம் காட்டினவள், ''நீ தோசை பண்ணி மூன்று நாட்களாகி விட்டன வித்யா— நாளைக்குக் கண்டிப்பாகச் செய்கிறாயா'' என்று சொல்லி 'நாழியாகி விட்டது; ஸ்கூல் பஸ் வந்துவிடும். நான் வருகிறேன்' என்று ஓட்டமாய் ஓடினாளே!

ஏனோ ஜென்னிக்குத் தோசை என்றால் அலாதிப் பிரியம். இரண்டு தோசைகள் நடுவில் சட்னியைத் தடவி, ஸாண்ட் விச் மாதிரி சுருட்டிக் கொண்டு தின்பாள்.

ஜென்னி சொன்னாளே என்று மறக்காமல் நேற்று மத்தியானமே தோசைக்கு ஊற வைத்து அரைத்தேனே! இனி ஜென்னி என்னைக்குத் தோசை கேட்டுக் கொண்டு வரப் போகிறாள்?

விடியற்காலையில் ரோஜாப்பூ முகத்தைக் கதவைத் திறந்து கொண்டு நீட்டி 'ஹாய் வித்யா, வாட்ஸ் ஃபார் ப்ரேக்பாஸ்ட்?' என்று எப்போது கேட்கப் போகிறாள்?

சாத்தியமா?

டீப் கோமாவாமே!

அது எப்போது சரியாகும்?

ஸ்டடிக்குச் சென்று அங்கே வைத்திருந்த ஜென்னியின் படத்தைக் கையில் எடுத்துப் பார்த்தாள் வித்யா.

இந்திய மணப் பெண்ணாக வேஷமணிந்த அன்று எடுத்த படம்.

சிவந்த உடம்பில் மயில் கழுத்து நிறப் பட்டுப் புடவை, சிகப்புப் பொட்டு, சிகப்பு அட்டிகை, வாய் கொள்ளாச் சிரிப்பு.

நல்ல வேளையாய் ஜென்னிக்குத் தோள் பட்டை வரை முடி. இரண்டு பக்கமும் வரிசையாய் ஸ்லைட் போட்டுத் தலை முடி பறக்காமல் இழுத்து வாரி எப்படியோ உன்பாடு என்பாடு என்று நாலு கால்களைப் போட்டு, தோட்டத்தில் பூத்திருந்த சாமந்திகளைப் பறித்துக் கோத்து, சென்டாய் ஜென்னியின் தலையில் வித்யா வைத்திருந்தாள்.

தன் உருவத்தைக் கண்ணாடியில் பார்த்த ஜென்னிக்கு ஏகப் பெருமை.

தான் அழகாய் இருக்கிறோம் என்று ஏக சந்தோஷம்.

'தாங்க்யூ ஸோமச் வித்யா' என்று பூனைக் குட்டி மாதிரி உரசிக் கொண்டு நின்ற ஜென்னி திரும்ப என்று அப்படி வந்து நிற்கப் போகிறாள்?

ஒரு சமயம் பள்ளியில் டீச்சர் 'கடவுள் சிருஷ்டித்த அழகான பொருட்களின் படங்களைக் கொண்டு வாருங்கள்' என்று மாணவிகளிடம் சொன்னபோது தன் குடும்பத்தின் படம் ஒன்றை எடுத்துப் போய் 'உலகம் பூராவும் தேடினும் இத்தனை அழகான சிருஷ்டியை நீங்கள் பார்க்க முடியாது' என்று எழுதி ஜென்னி கொடுத்ததை டீச்சர் வகுப்பில் சொல்லி மகிழ்ந்து போனதோடு அல்லாமல் டோராவுக்குப் போன் பண்ணி 'உங்கள் மகளின் உன்னதமான நினைப்பைப் பாருங்கள்' என்று பாராட்டினதையும் வித்யா இப்போது நினைத்துப் பார்த்தாள்.

தன் குடும்பத்தை ஜென்னி நேசிக்கும் அளவுக்கு இவர்கள் அவளிடம் அன்பு செலுத்துகிறார்களா?

ம்ஹூம் இல்லை.

அப்படிப்பட்ட பவித்ரமான அன்பு இவர்களுக்கு இருப்பதாய் நிச்சயம் தெரியவில்லை.

இருந்திருந்தால் 'நான் கொஞ்சம் தூங்கப் போகிறேன்' என்று டோரா சொல்லி இருப்பாளா?

பெண் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கும்போது ஒரு அம்மாவுக்குத் தூக்கம் எப்படி வரும்?

அடாப்டட் என்பதால் டோராவால் இப்படி இருக்க முடிகிறதோ?

மேல் நாட்டவரின் தத்து எடுத்துக் கொள்ளும் மனப்பான்மை உலகப் பிரசித்தம் ஆயிற்றே!

தங்களுக்குக் குழந்தை வேண்டுமானால் பெற்றுக் கொள்ளாமல், கண் காணாத ஏழை நாடுகளிலிருந்தெல்லாம் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொண்டு மனசில் கல்மிஷமே இல்லாமல் சொந்தக் குழந்தைக்கும், வளர்ப்புக் குழந்தைக்கும் வித்யாசமே இல்லாமல் வளர்ப்பார்கள் என்பதெல்லாம் வெறும் பேச்சுதானா?

இட்டத்தில் போய்ப் பார்க்கும்போது பாசத்தில் வெவ்வேறு ஆழங்கள் இருப்பது புரிகிறதா?

வித்யாவுக்குத் திடுமென்று முந்தாநாள் இரவு மார்க் 'உங்களுக்கே நான் சொல்லும் வரை இந்த உண்மை புரியவில்லையே' என்று கூறியது ஞாபகத்துக்கு வந்தது.

அதுவும் சரிதானே!

மார்க் உண்மையை உடைக்கும் வரை என்னால் இதை ஊகிக்க முடியவில்லையே!

ராஜு சொல்வது போல் இந்த நாட்டு மனிதர்களை நான் புரிந்து கொண்டது போதாதோ?

அனாவசியமாய் எதை எதையோ கற்பனை பண்ணிக் கொண்டு மனசைக் குழப்பிக் கொள்கிறேனோ?



44ம் பக்கம் பார்க்க—

வித்யாவுக்குக் கஷ்டமாக இருந்தது.

நினைவுகளை ஒதுக்கிவிட்டுக் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள்.

இரண்டு மணிக்கு டோரா திரும்பப் போன் செய்தாள்.

''ஜென்னி மூச்சு விட முடியாமல் கஷ்டப் படுகிறாளாம். நாங்கள் போய்ப் பார்த்து வருகிறோம். குழந்தைகள் வந்தால் நீ உன் வீட்டில் வைத்துக் கொள்ள முடியுமா? ஸ்மைலி, ராபின் பற்றிக் கவலை இல்லை... க்ளாரா தான் ஒன்றும் புரியாமல் அவஸ்தைப்படுவாள். கதவின் கீழ் 'நான் ஹாஸ்பிடலுக்குப் போகிறேன்; வரும்வரை வித்யா வீட்டில் இருங்கள்' என்று எழுதி வைத்து விடட்டுமா?''

வித்யா சரி என்றாள்.

டோரா சொன்னது போலவே ஸ்மைலும், ராபினும் பள்ளியிலிருந்து வந்து வித்யா கொடுத்த தின்பண்டங்களைச் சாப்பிட்டுப் பால் குடித்த பின் விளையாடப் போய்விட்டார்கள்.

க்ளாரா மட்டும் 'அம்மா எப்போது வருவாள்' என்று கேட்டுக் கொண்டே வித்யாவைச் சுற்றினாள்.

மூணரைக்கு மார்க்கும் டோராவும் ஹாஸ்பிடலிலிருந்து நேரே இங்கு வந்தார்கள்.

களைத்துப் போய், கண்களின் அடியில் கருவட்டங்கள் பளிச்சிட டைனிங் டேபிள் முன் உட்கார்ந்தவர்களைப் பார்த்தால் வித்யாவுக்குப் பாவமாக இருந்தது.

ராஜு சொன்ன மாதிரி இவர்கள் மனக்குள் வேதனையை மூடி வைத்துக்கொண்டு கஷ்டப்படுகிறார்களோ?

இரண்டு தட்டுக்களில் அவர்களுக்கும் பலகாரங்களை எடுத்து வைத்துவிட்டுச் சூடாக காப்பி கலந்தாள் வித்யா.

''தாங்க்ஸ் வித்யா — வீ நீட் திஸ் நௌ'' என்றபடி காப்பியை மார்க் வாங்கிக்கொண்டான்.

''ஹௌ ஈஸ் ஜென்னி?''—

''ஷீ ஈஸ் ஸ்டில் ஹோல்டிங் ஆன்'' மார்க் வேதனையுடன் சிரித்தான்.

''ஐந்து மணிக்கு நான் மறுபடியும் ஹாஸ்பிடலுக்குப் போகப் போகிறேன். நீ ஜென்னியைப் பார்க்க வேண்டும் என்றாயே, வருகிறாயா?''—

டோராவின் கேள்விக்கு வித்யா பலமாய்த் தலை ஆட்டினாள்.

மேற்கொண்டு பத்து நிமிடங்கள் போல உட்கார்ந்திருந்து விட்டு அவர்கள் கிளம்பினார்கள்.

ராஜுவுக்கு போன் பண்ணித் தான் ஜென்னியைப் பார்க்கப் போவதைச் சொன்ன வித்யா சரியாய் ஐந்தடிக்க ஐந்து நிமிஷங்கள் இருக்கையில், பக்கத்து வீட்டுக்குப் போனதும் அவர்கள் புறப்பட்டார்கள்.

ஜென்னி இன்டென்ஸிவ் கேர் அறையில் வைக்கப்பட்டிருந்தாள்.

மண்டையில் டர்பன் கட்டின மாதிரி பெரிய பாண்டேஜ்.

முகம் பூராவும் புஸு புஸுவென்ற வீக்கம். ரத்தம் கன்றிப் போன கன்னங்கள். மூடின கண்கள்.

மூச்சு விடுவது சிரமமாயிருந்தது என்று ட்ரக்கியோடோமி பண்ணி இருந்தார்கள்.

ஜென்னி உடம்பிலிருந்து என்னென்னமோ குழாய்கள்.

ஆக்ஸிஜன், கத்திட்டர், இன்ட்ராவீனஸ் மருந்துகள்....

இந்தப் பக்கம் ஹார்ட் மானிட்டர்.

அந்தப் பக்கம் டயாலிஸிஸ் கருவி.

வண்டியின் சக்கரம் வயிற்றில் ஏறிவிட்டதால் ஒரு பக்க சிறுநீரகம் சுத்தமாய்ப் பாதிக்கப்பட்டு விட்டதாம். இன்னொரு பக்கம் லேசாய் வேலை பண்ணுவதற்கு உபகாரமாய் டயாலிஸிஸ் கருவி!

ஜென்னிக்கு உயிர் இருக்கிறது என்று நம்ப வைக்கிற நிஜுவில் மார்புக் கூடு சின்னதாய் ஏறி இறங்கியதைத் தவிர அவளிடம் கடுகத்தனை கூட சலனம் இல்லை.

''நான் ஸ்கூலுக்குப் போயிட்டு வரேன் வித்யா, பஸ் வந்துவிடும்'' என்று சொல்லித் துறுதுறுவென்று ஓடின பெண் இவள்தான் என்றால் நம்புவது கஷ்டமாக இருந்தது.

அந்தச் சிரிப்பும், அந்த அழகும் எங்கே?

முகத்தில் சவக் களையுடன் கிடப்பது அந்த ஜென்னியா?

விவரிக்கத் தெரியாத சங்கடம் வயிற்றைப் பிசைந்து கொண்டு எழுவது போல இருக்

கவே பார்வையை அறையில் ஒரு பக்கமாய் வைக்கப்பட்டிருந்த மலர்க் கொத்துக்கள் மேல் வித்யா திருப்பினாள்.

ஏது இத்தனை மலர்க் கொத்துக்கள்?

கிட்டப் போய்ப் பார்த்தபோது 'கிலவ் யூ ஜெனனி' என்ற வாசகங்களோடு டோரா, மார்க், குழந்தைகள் என்று ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரு கொத்து வந்திருப்பது புரிந்தது.

நார்மன் பிளாக்கிடமிருந்துகூட ஒரு கொத்து. 'ஆழ்ந்த வருத்தத்துடன்' என்று அந்தக் குறிப்பு சொன்னது.

மயக்கத்தில் கிடக்கும் குழந்தைக்கு இவர்கள் மலர்க் கொத்து அனுப்பியிருப்பதெல்லாம் புரியுமா? அப்புறம் எதற்காக ஏக பணம் செலவழித்து இந்தக் கொத்துக்கள்?

'இந்த நாட்டு ஜனங்களை நீ இவா கண்ணோட்டத்திலேந்து பார்த்துப் புரிஞ்சிக்க முயற்சி பண்ணணும் வித்யா'—

ராஜு சொல்வதைப் போல் 'உன் மேல் எங்களுக்கு அன்பு இருக்கிறது' என்று தெரிவிக்கும் இந்த நாட்டுப் பழக்கமா இது?

வீட்டுக்குத் திரும்பிய பிறகும் வித்யா வின் குழப்பம் தெளியவில்லை.

மாலை ஏழு மணி சுமாருக்கு ஆபிஸிலிருந்து திரும்பிய ராஜு "சந்திரன் போன் பண்ணினான் வித்யா; நாளைக்கு அவன் அம்மா தனியா நியூயார்க்குக்கு இண்டியாலேந்து வராளாம். 'எனக்கு முக்கியமான மீட்டிங் இருக்கு. அதனாலே நீ போய் அம்மாவை மீட் பண்ணி, வியாட்டில் பிளேன்லே பார்த்து ஏத்திவிட முடியுமா'னு கேட்டான். அவன் நமக்கு எவ்வளவோ உபகாரமாக இருந்திருக்கான். இதுகூட முடியாட்டா எப்படி? நாளைக்கு ஆபீஸுக்கு லீவு போட்டுட்டேன். அடுத்த இரண்டு நாளும் சனி, ஞாயிறுதானே! கார்த்தால எட்டுமணி ப்ளைட்டுலே நாம்ப இரண்டு பேரும் நியூயார்க் போறோம்... சந்திரன் அம்மாவை பிளேன் ஏத்தின பிறகு, லெட் அஸ் ஹாவ் எ ஹாலிடே ஃபார் டு டேஸ் இன் நியூயார்க். ஓ.கே?" என்றபோது அப்பாடி—தாற்காலிகமாய் அடுத்த வீட்டு வேதனையிலிருந்து விடுபட இது ஒரு சந்தர்ப்பம் என்று நினைத்த வித்யாவுக்குச் சந்தோஷமாய் இருந்தது.

(தொடரும்)



# ஜீப்பிலிருந்து விழுந்த ஜெய்!

"இந்தப் படத்தைப் பார்த்ததும் எனக்கு முதலில் நினைவு வருவது நான் ஒரு ஜீப்பிலிருந்து கீழே விழுந்த சம்பவம்தான்" என்று ஆரம்பித்தார் **ஜெய்சங்கர்**. "சண்டைக் காட்சியை ஓடும் ஜீப்பில் படமாக்க முடிவு செய்தார் இயக்குனர். எனக்குப் பதிலாக ஒரு டூப் போட்டு எடுத்துவிடலாம் என்ற யோசனை தெரிவித்தார். நான் அதை மறுத்தேன். டூப் போடுவது நம்மால் செய்ய முடியாத காரியங்களைச் செய்வதாகக் காண்பிக்கத்தான். இதுபோன்ற சிறு விஷயங்களை நானே செய்ய விரும்பி ஜீப்பில் அமர்ந்தேன். ஜீப் ஓட ஆரம்பித்தது. படத்திலுள்ளது போன்று மேலே இருக்கும் கம்பிகளில் ஒன்றில் நான் ஒரு காட்சியில் தொங்க அது என் கையோடு வந்து விட்டது! ஓடும் ஜீப்பிலிருந்து நான் கீழே விழ ஒரே பரபரப்பாகி விட்டது.

"கார் என்றவுடன் வேறொரு சம்பவமும் என் நினைவுக்கு வருகிறது. ஆந்திரப் பிரதேசத்தில் மலை மேலே ஒரு நாள் ஷூட்டிங் முடிந்து எல்லோரும் திரும்ப இரவு வெகு நேரமாகி விட்டது. எனக்கென்னவோ அந்த மலைப் பிரதேச அமைதியான சூழ்நிலையில் சற்று அமர்ந்துவிட்டுச் செல்லலாம் என்று தோன்றியது. எவ்வளவு நேரமாயிற்றோ, மேக்கப் மேன் மாணிக்கம், 'என்ன சார் இங்கே வந்து உட்கார்ந்திருக்கீங்க? வாங்க போகலாம்' என்றார். அவருடன் மலையிலிருந்து கீழே வரக் காரில் ஏறிக் கிளம்பினேன். அரை மைல் கூட வந்திருக்க மாட்டோம். எங்கள் கார் விளக்கொளியில் ஒரு பெண் தரையில் கிடப்பதைக் கண்டேன். நான் இறங்கி அவளுக்கு உதவ வேண்டும் என்றேன். 'கண்டிப்பாகக் கூடாது' என்றார் மாணிக்கம். பிறகு ஜனநடமாட்டம் இருந்த ஒரு சிற்றூரில் டீ சாப்பிட நிறுத்தினோம். டீக்கடை முதலாளி, 'இந்த வகையான நூதனத் திருட்டுக் காரணமாகப் பல குடும்பத்தினர் தங்கள் பொருள்களை எல்லாம் இழக்கிறார்கள்' என்றார். நடு ரோட்டில் அனாதையாகக் கிடக்கும் ஒரு பெண்ணிடம் இரக்கப்பட்டு நிறுத்தினால் ஒளிந்திருக்கும் குண்டர்கள் காரைச் சூழ்ந்து கொள்வார்களாம்!

"'சுஹாக்' என்ற இந்த ஹிந்திப் படத்தின் ஸ்டில்லை நான் பார்க்கும்போது வேறு பல விஷயங்களும் ஞாபகம் வருகின்றன. நான் எப்பொழுது எந்தச் சூழலில் கார் ஓட்டக் கற்றுக்கொண்டேன், காரில் என்னுடன் வந்தமுதல் காதலி யார், ப்ரேக் சரியாகப் பிடிக்காத ஒரு காரை நான் ஓட்டிச் சென்று பட்ட அவஸ்தை என்று பலவும் நினைவு வருகின்றன. சொல்லிக் கொண்டே போகலாம். கல்கியில் போட இடமிருக்கிறதா?"

பேட்டி: **சலன்**

# சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீட்சிதர் சொல்வார்....

''தெய்வபலம் தான் முக்கியம். மனுஷ்ய பலமோ பணபலமோ மட்டும் இருந்தால் போறாது. அதை நாம் தெய்வத்தைப் பூஜிப்பதன் மூலம்தான் அடைய முடியும்.

பணம் படைத்தவர்கள் கூட எத்தனையோ பேர் பெண்களுக்கு காலாகாலத்தில் திருமணமாகாமலும், குடும்பத்தில் அமைதியில்லாமலும் பலவிதமான கவலையில் ஆழ்ந்துள்ளனர்.

காரணம்? தெய்வபலம் குறைந்ததுதான். அதனால் மன நிம்மதி போய் விட்டது. எதற்கெடுத்தாலும் கவலை, பயம், நிம்மதியின்மை. நம் துக்கத்தை எல்லாம் போக்கி க்ஷேமத்தை கொடுக்க தெய்வம் ஒன்றினால்தான் முடியும்.''

இவ்வாறு தெய்வம், தெய்வம், தெய்வபலம் என்று தெய்வ நம்பிக்கையை மக்களிடையே பரப்பி தானும் நம்பி அதில் வெற்றி கண்டு வாழ்ந்த பரிசுத்த ஆத்மா ஸ்ரீ தீட்சிதர்.

மக்களின் கவலைகளைப் போக்கி அவர்கள் க்ஷேமத்தை அடைய தம் வாழ்நாளில் சாசுவதமான ஒரு நற்பணியை செய்ய வேண்டுமென்று, தமது ஜயமங்கள தோத்திரப் புத்தகத்தின் வாயிலாக சர்வகார்ய சித்தி அளிக்கும் ஸ்ரீ ஜயஹனுமான் பூஜையைப் பிரபலப்படுத்தினார்.

**அவருடைய ஜயமங்களத் தோத்திரப் புத்தகத்தை ஆதாரமாகக் கொண்டு கல்கி ஓவியர் வினு வரைந்ததுதான்**

## ஸ்ரீ ஜயஹனுமான் வண்ணப்படம்

(Copyright regd. A. 20286/78)



எல்லாவற்றிற்கும் மேலாக நடமாடும் தெய்வமாகிய **ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களால்** மகத்தான அருளாசிகள் வழங்கப் பெற்றதினால் இப்படத்திற்கு ஒரு தனி சக்தி அமைந்துள்ளது.

**இதை பக்தியுடன் 45 நாட்கள் பூஜித்தால்**

திருமணம், உத்தியோகம், வியாபாரம், புத்திர பாக்கியம் போன்ற நினைத்த காரியம் நிச்சயம் நிறைவேறுகிறது.

பல்லாயிரக்கணக்கான மக்கள் பூஜித்துப் பலனடைந்து அவர்களிடமிருந்து தகவல் வந்த வண்ணமாக இருக்கிறது.

ஜாதி, மத, வேறுபாடின்றி ஆண், பெண், யார் வேண்டுமானாலும் பூஜிக்கலாம். எல்லா சுவாமிக்கும் அநுசரிக்கும் ஆசாரம் போதுமானது. ஸ்ரீ ஜயஹனுமான் படத்திற்கென்று தனியாக விரதமோ, கட்டுப்பாடோ இல்லை. அசையாத நம்பிக்கையும் பக்தியும்தான் முக்கியம். படத்துடன் பூஜை முறைப் புத்தகமும் இனாமாகத் தரப்படுகிறது. பூஜைப் புத்தகம், தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் உள்ளன. இப்படம் வீட்டிலிருந்தாலே பல நன்மைகள் உண்டாகும். இன்றே வாங்கிப் பூஜையை ஆரம்பியுங்கள்.

அருள் பொழியும்

**ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள்** வண்ணப்படமும்

எங்களிடம் கிடைக்கும்.



**கல்கி ஓவியர் வினு வரைந்தது**

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகளால் அங்கீகாரம் செய்யப்பட்டது.

இவ்விரண்டு படங்களும் இரண்டு பொக்கிஷங்கள்.

இன்றே கீழ்க்கண்ட முகவரிக்குத் தேவையான படங்களின் கிரயத்துடன் பதிவுத் தபால் செலவும் சேர்த்து முன்னதாக மணியார்டர் செய்யவும். வி. பி. பி. இல்லை. நேரிலும் கிடைக்கும்.

அளவு / விலை **ஸ்ரீ ஜயஹனுமான்** படம் $13\frac{1}{2} \times 20''$ ரூ. 5-00
$9\frac{1}{2} \times 15''$ ரூ. 3-00

பூஜைப் புத்தகத்துடன்

**ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள்** படம் $13\frac{1}{2} \times 20''$ ரூ. 5-00
$9\frac{1}{2} \times 15''$ ரூ. 3-00

பாகிங் உட்பட பதிவுத் தபால் செலவு ரூ. 4-00 தனி இரண்டு படங்கள் வரை. 50 படங்கள் வாங்குபவர்களுக்கு 20% கமிஷன் தரப்படும். ஏஜென்ஸி எடுக்க விரும்புகிறவர்கள் விண்ணப்பிக்க :

உரிமையாளர் : **ஸ்ரீமதி சரஸ்வதி வெங்கட்ராமன்**

**W/O விநு (கல்கி)**

**தெய்வப்படம் வெளியிடுவோர் விற்பனையாளர்கள்**

16, வேலாயுத முதலித் தெரு,

**நுங்கம்பாக்கம், சென்னை-600 034** போன் : 89191

(வள்ளுவர் கோட்டம் பஸ் ஸ்டாப் அருகில்)



புஷ்பா தங்கதுரை

# கடலுக்குள் ஜூலி

Sweet heart,

I can yet write unto you but with a weak hand, for I have suffered the most violent calenture that ever man did and lived.

*தளபதி ராலே தமது காதலிக்கு டெஸ்டினி என்ற கப்பலிலிருந்து எழுதியது. (1584)*

## 13

ஜூலி நொண்டியாகிச் சரிந்து அந்த இரவில் ஒரு ஆத்திர கடலின் கோபத்துக்கு ஆளாகிக் கொண்டிருந்தாள். உயரமான அலைகள் அவளது ஹல்லைச் சிதற அடித்துக் கொண்டிருந்தன.

வெறும் கருவாலி மரத்தால் ஆன அந்தக் கப்பல் இயற்கையின் சீறலில் தன் கட்டுக் கோப்பை விடத் தொடங்கியிருந்தது.

இதற்குள் கீழ்த் தளங்களில் அடைபட்டுக் கிடந்த நோய் பிடித்த மாலுமிகள் வெறியுடன் கத்திக் கொண்டு, இருட்டில் தள்ளாடி மேலே வரத் துணிந்தார்கள்.

மிகுந்த நோயுள்ளவர்கள், குறைந்த நோயாளிகளின் கையைத் தோளைப் பிடிக்க, எல்லாரும் தடுமாறி ஏணியை அடைந்து மேலே ஏறத் தொடங்கினார்கள்.

கப்பலின் சாய்வும் ஆட்டமும் அவர்களது தடுமாற்றத்தை அதிகப்படுத்தின. கடைசி நேர தைரியங்களுடன் மேல்தளத்துக்கு ஒவ்வொருவராக ஏறிக் குவியத் தொடங்கினார்கள்.

பசியும், நோயும், தண்ணீரின்மையும், கடின உழைப்பும், அவர்களிடம் இருந்த கடைசி மனிதத் தன்மைகளை உறிஞ்சி விட்டிருந்தன.

சிலர் வெறியாகிக் கத்தினார்கள், சிலர் பாடினார்கள், சிலர் முணுமுணுத்தார்கள்.

சிலர் சிராதிகளைப்பிடித்து,மிக உருக்கமாகப் பிரார்த்தித்தார்கள்.

எல்லோர் கண்களிலும் மனங்களிலும் இங்கிலாந்தில் வாழும் அவர்கள் குடும்பங்களோ, தாய்களோ, மனைவிகளோ, காதலிகளோ, அடிக்கடி வந்து கொண்டிருந்தார்கள்.

கண்ணீர் ஒரு மழை போல் வழிய, எல்லோரும் இன்னது செய்ய வேண்டும் என்று தெரியாமல் நொடிக்கு ஒரு காரியம் செய்து கொண்டிருந்தார்கள்.

—இரவிலா இந்தப் புயல் வரவேண்டும்? பகலில் வரக்கூடாதா, கடவுளே இது ஒரு சோதனையா? என்று வாய்விட்டுப் புலம்பினார்கள்.

இதற்குள் ஸ்டன் நிலைமையை ஊகித்து, பதறாமல் யோசனை செய்தார்.

—ஏகோதர மாலுமிகளே! பீதி அடையாதீர்கள்! கனமான பொருளை எல்லாம் ஸ்டார் போர்ட் பக்கம் கொண்டாருங்கள், என்று கத்தினார்.

எல்லோரும் யந்திரகதியாக கட்டளைக்குக் கீழ்ப்படியத் தொடங்கினார்கள்.

*ரங்கூன் பங்களாவில் சம்பந்தசாமியின் தர்பாரை நீங்கள் பார்ப்பதற்குள் அவரைப் பற்றிய சிறு குறிப்பு:*

சம்பந்தசாமிக்கு ரங்கூன் சம்பந்தசாமி என்று அலியஸ் உண்டு. இரண்டாவது யுத்தத்தின்போது ரங்கூனிலிருந்து கால்நடையாகத் தாய்நாடு வந்தவர். வெறும் துண்டு மட்டும் போட்டு வந்தவர். சென்னையில் தங்கிய அமெரிக்கத் துருப்புக்களுக்கு இளநீர் விநியோகம் செய்தவர். பிறகு கஞ்சாவும் வியாபாரம் செய்தவர். யுத்தம் முடியும்போது ஒரு பங்களா, ஒரு பேபி ஆஸ்டின், ஒரு ஆங்கிலோ — இண்டியன் பேபி. அவனுடைய பேபி எல்லாவற்றுக்கும் சொந்தமானவர்.

கடைசி இரண்டு பேபிகளும் சில வருஷங்களில் எங்கு அஸ்தமித்தார்கள் என்று தெரியாது.

சம்பந்தசாமி சில பின்புற நடவடிக்கைகள் உள்ளவர்.

யுத்தம் முடிந்து சுதந்திர ஆண்டுகளில் மிகவும் தாராளமாகக் கடத்தலில் ஈடுபட்டவர். அபின் அவரது ஏகபோகம்; கொஞ்ச நாட்கள் சொந்த யாட் கூட வைத்திருந்தவர்.

பின் வருடங்களில் பெரிய மனிதன் வேடத்தில் டில்லித் தலைவர்களுடன் விருந்தும் சாப்பிட்டவர்.

அபினில் சங்கடங்கள் ஏற்பட்டதால் சிலை கடத்தலில் ஈடுபட்டவர். பத்திரிகைகளில் அவை பிரபலமாகு முன்பே இந்தியாவிலிருந்து ஏராளமான சிலைகளை அப்புறப்படுத்தியவர். அவர் இந்தத் தொழிலில் இறங்கிய நாட்களில் அப்படி ஒரு வியாபாரம் நடக்கிறது என்றுகூட யாருக்கும் தெரியாது. அப்பாவி இந்தியர்கள்.

ஈட்டிய பொருளை பாரிஸ், ஆம்ஸ்டர்டாம், லண்டன், நகரங்களில் ஆனந்தமாகச் செலவு செய்தவர். பாரிஸில் ஒரு ஆண்டு தங்கி பிரெஞ்சு சுகங்களைப் பூரணமாக அனுபவித்தவர். பிரெஞ்சு கீழ் உலகங்களில் நன்றாகப் பரிச்சயமானவர்.

கடைசியில் அடியாட்கள் சிலர் அவரை ஏமாற்றிப் பெரியாட்களாகிவிட, கொஞ்சம் நொடிந்து ஊட்டியில் மேனூட்டு ருசியோடு வாழ்ந்தவர். கூடவே பிரெஞ்சுக்காரி நான்சியையும் அழைத்து வந்தவர்.

புலன்களும் ஓய்ந்து போய்ப் பின்னுக்கு அடிக்க, சில சில்லறைக் கடத்தல்களுடன் தமது தலைநகரைக் கனிநாகலாபுரத்தின் பத்து ஏக்கர் விஸ்தீரண நிலத்துக்கு மாற்றியவர்.

இங்கே இந்த ரங்கூன் பங்களாவில் நித்திய வாசத்திற்கு வந்தபோது அவரது பிரெஞ்சு மனைவி மரணம் அடைய, அவள்

விட்டுச் சென்ற பெண் ரீட்டாவைக் கருத்தும் கண்ணுமாக வளர்ப்பவர்.

பணத்திலும், உடலிலும் க்ஷீண திசை ஏற்பட, பழைய கவர்க்கங்களை நினைத்துச் சோகமாக வாழ்வதுடன், விட்ட குறை தொட்ட குறையாகச் சில சில்லறைக் கடத்தல் வேலைகளை — சாமி சிலைகள் அவர் ஸ்பெஷாலிடி — செய்து ஓரமாக ஒரு சின்ன அளவு உல்லாச வாழ்க்கை வாழ்பவர்.

—அந்த ஆளு யாரப்பா! மல்லிக்னு பேர் சொன்னான். ஏதோ சோப்னாங்கின்னு நினைச்சா மடி மேலே கை வைக்கிறானே.

(தர்பார் நடக்கிறது; எதிரே லக்குவும் மீசைக்கார சோமுவும் நிற்கிறார்கள்.)

—என்ன செஞ்சான் தலைவரே!

கேட்டவன் லக்கு. இலக்குமணன் தூய பெயர். கர்லாக் கட்டையாக இருந்தான். அடியாளின் சகல குணாதிசயங்களும் பிரசன்னம். எண்ணெய் உடம்பு. மஸில்ஸ் பம்ப் என்று வீங்கி, மார்பு ரிவெட் அடித்த இரண்டு இரும்பு ப்ளேட்கள்.

—டைம்ஸுக்கு லெட்டர் எழுதியிருந்தேன்லே?

—ஆமா,

—காப்டன் பேரு பால்மர்ன்னு எழுதியிருந்தேன். அதே பால்மரைப் பற்றி வம்சாவளி கேட்க வந்துட்டான், இந்த ஆளு!

—விஷயம் புரிஞ்சிருப்பானா?

—தெரியாது. நம்பளை ஆழம் பார்க்கணும்னு டூப் அளக்கிறானோ என்னவோ? நான் சார்ட்டைக் காண்பிக்கல்லே!

—எனக்கு ஒரு சந்தேகம் தலைவரே!

—கேளு!

—கப்பல் விஷயம் இவனுக்குத் தெரிஞ்சிருக்குமோ?

—இவனுக்கா? நீ ஒண்ணு! வெள்ளைக்காரனுக்கே தெரியலே! தெரிஞ்சிருந்தா டைம்ஸிலே லெட்டர் பார்த்துட்டு இதுக்குள்ளே ஓடியாந்திருக்கமாட்டான்?

—ஒருவேளை தெரிஞ்சிருந்தான்னு வச்சுக்குங்க!

—அந்தச் சந்தேகம் எனக்கும் தோணிச்சு! அதனாலேதான் உன்னைக் கூப்பிட்டேன். அந்த ஆளு பூந்தளத்திலே இருக்கான். நம்ப ஊருக்கு அடிக்கடி வரான்னு கிருஷ்ணன் சொன்னாரு. கொஞ்சம் கவனிக்கணுமே!

—கவனிக்கிறேனுங்க!

லக்கு போக, சோமு பின்தொடர, சம்பந்தசாமி எழுந்திருந்தார். நீளநடந்து அரும் பொருள் ஹாலைத் திறந்து உள்ளேபோனார். அந்த டிகேண்டர் சீசா பக்கம் வந்து நின்றார். அதன் அருகிலே அந்தப் பர்கண்டி பாட்டிலும் இருந்தது. இரண்டும் அந்த எலும்புகிடைத்த பிரதேசத்திலிருந்து கிடைத்தவை. அதிகாரிகளுக்குத் தெரியாமல் அடியாட்களை அனுப்பி அங்குள்ள மண்ணைத் தோண்டியபோது கிடைத்த பாட்டில்கள் அவை. அதில் அந்தப் பர்கண்டி பாட்டிலில்தான் சார்ட் கிடைத்தது.

பாட்டிலை எடுத்தார். ஒற்றைக் கண்ணை அதன் வாயில் வைத்து உள்ளே பார்வையால் துழாவினார். எதுவும் தெரியவில்லை. இப்படி ஒரு துரதிர்ஷ்டம் உண்டா, என்று நினைத்தார். சார்ட் முழுசாக இருக்கிறது. அந்தக் கப்பல் பெயரைக் குறிக்கும் இடம் மட்டும் அரித்துப் பொத்தல் விட்டிருக்கிறதே! உள்ளே அதன் துணுக்குகளாவது இருக்கின்றனவா? இல்லை.

அடுத்து டிகேண்டர் பாட்டிலை எடுத்தார். உள்ளே பார்த்தபோது காலியாக இருந்தது. இருபத்தி நாலுமணி நேரம் லேட் என்று அவருக்குத் தெரியாது. முந்திய தினம் மல்லிக் அதிலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்துப் போயிருந்தான். பாட்டிலில் கழுத்தோரம் காகிதம் ஒட்டியிருந்ததை அவர் ஆரம்பத்தில் சரியாகக் கவனிக்கவில்லை. அது மல்லிக்கின் அதிர்ஷ்டமாகப் போயிற்று.

—காலி, காலி என்று சொல்லிக்கொண்டே திரும்பி வந்தார். பிறகு, மர பீரோ பக்கம் போனார். கதவின் ஒன்பது லீவர் பூட்டைத் திறந்து ஆவலோடு ஒரு பெரிய மடிப்பு அட்டையை எடுத்தார். மேஜை மீது பிரித்தார்.



அந்தப் பழங்கால சார்ட் பலவித ரேகைகளோடு விரிந்தது.

பட்த்தின் பழமையும் நெடியும் அவரைக் கொக்கி போட்டன.

அட்ச, தீர்க்க ரேகைகளின் குறியீடுகள் ஒரு ஜாலம் போல் கண்ணில் வேலை செய்தன.

பழமை எழுத்துக்களும், அவை எழுதப் பட்டிருந்த முறையும் மனத்துக்குள் விநோத தங்களைக் கிளப்பி விட்டன.

அதன் மொத்தத் தோற்றமும் ஒரு பரவசமான கவர்ச்சியை அவர் மீது ஏற்படுத்தி விட்டன.

ஹியர் லைஸ்.... அந்த எழுத்துக்களைப் பார்த்தார். அங்கே ஓர் அம்புக் குறி ஒடியிருந்தது.

ஒரு பெயர் தெரியாக் கப்பல் இந்த இடத்தில் மூழ்கியிருக்கிறது. பேப்பரின் பழமையைப் பார்த்தால் நூற்றாண்டுக்கு முன்னால் உள்ள கப்பலாக இருக்க வேண்டும்

கப்பலுக்குள் என்ன இருக்கும்?

விலை மதிப்பில்லா வெள்ளி, தங்க நாணயங்கள், பழங்காலக் கலைப் பொருட்கள், பாத்திர வகைகள் எல்லாமே இருக்கலாம். யார் கண்டார்கள்?

இவைகளுக்குப் பழமையினால் ஏற்பட்ட மகிமை இருந்தாலும் இருக்கும்.

மேனாடுகள் இதுபோன்ற கப்பல்கள் பலவற்றைக் கண்டுபிடித்துப் பொருள்களை எடுத்திருக்கிறார்கள். எடுத்த பொருள்கள் விற்பனையில் பல மில்லியன் பவுன்களைத் தந்திருக்கின்றன.



எழுத்தாளர்: துணுக்கு எழுதறதை விட்டுட்டு ஏன் தொடர்கதை எழுதச் சொல்லறே?

மனைவி: தொடர்கதை திரும்பி வந்தா பேப்பர் காரனுக்குப் போட்டா காசு நிறைய கிடைக்குமே!

- லலிதா செல்லப்பா

இந்தக் கப்பலிலும் நிறையப் பொருட்கள் இருக்குமோ?

ஆசை கொஞ்சம் கொஞ்சமாகக் கனத்து எழுந்தது.

கப்பல் விஷயங்களில் அவர் இதுவரை அதிகம் சிரத்தை செலுத்தியதில்லை. அது ஒரு தப்பிதம்.

ஸ்பர்சம் பட, திரும்பினார்.

ரீடா நிசப்தமாக நின்றாள். கண்ணால் வினவினாள்.

—எல் எத் யூன் கார்த்! கார்த் த வாபதேர் ஆன்ஸியான்! என்றார் பிரெஞ்சில். (இது ஒரு சார்ட். ஒரு பழங்காலக் கப்பலுடையது).

அதிசயத்துடன் பார்த்தாள் அவள்.

(எங்கே கிடைச்சது?)

—தான் லெத் பூதெய்யி (அந்தப் பாட்டிலுக்குள்)

(ஓ!)

ரீடாவின் கண்ணில் மல்லிக்கும், அவன் பயம் கலந்த வேண்டுதலும் தோன்றிவிடப் புன்னகை அழகாகப் பூத்தாள்.

**ச**ம்பகா மல்லிக்கிடம் விடை பெற்றுப் போனாள்.

அதே நேரம் மல்லிக்குக்கு ஆர்கியாலஜிஸ்ட் கிருஷ்ணனின் விபரீத ஆசை நினைவுக்கு வந்தது.

சொல்ல வாயெடுத்தான். முடியவில்லை. சம்பகா புன்னகை பரப்பிக் கொண்டு புறப்பட்டுப் போனாள்.

—சார்ட்டா? என்றான் கிருஷ்ணன் ஆச்சரியப்பட்டு, சம்பகாவை வீட்டில் பார்த்ததும்.

அவர் அப்போது ஷேவ் பண்ணி முடித்திருந்த நேரம். ஆஃப்டர் ஷேவ் லோஷனைத் தடவி அறையை மணக்க விட்டிருந்தார்.

சம்பகா அருகில் வந்தபோது பல புலன்கள் கரீர் என்று வேலை செய்தன. பல உணர்வுகள் துந்துபி வாசிக்க அவளை நெருங்கி நின்று —என்ன சார்ட்? என்று ஒரு கேள்வி கேட்டார்.

—அதுவா? என்று சம்பகா நீட்டி நிறுத்தினாள். என்ன சொல்லலாம் என்று யோசனை. —எலும்புக் கூடு கிடைச்சப்போ டெவில்ஸ் கோப் கிடைக்கலே! நிச்சயம் அங்கே சார்ட் கிடைக்கணுமே! ஏதாவது சார்ட்! ஒரு தளபதின்னு சார்ட் இருக்காது?

—இருக்கும், இருக்கும். ஆனா இதுவரை கிடைக்கல்லே. நான் வேணும்னு அங்கே தோண்டச் சொல்றேன்... நல்ல பொண்ணு! பாவம்! நல்ல பொண்ணு!

என்று சொல்லி அவள் தோளில் கை வைத்து இரண்டு முறை தட்டி மூன்றும் முறையில் நிரந்தரமாக வைக்க,

அது எந்த இனத்தைச் சேர்ந்த ஸ்பர்சம் என்று தெரியாத சம்பகா சிறிது சங்கடப்பட்டு, பிறகு தனது அறியாக் குழந்தைத்தன வகையில் வழுவிக் கொண்டு போக,

கிருஷ்ணன் நிறைய ரஸி உணர்வுகளில் தேகம் பெருவாரியாகப் பொங்க, நாக்கைக் கடித்து நின்றார். லோஷன் எரிச்சல் கொடுத்தது.

(தொடரும்)







# அறம் உணர்த்தும் அறிவரங்கம்

**பி.** எஸ். ஜி. குடும்பத்தின் சென்ற தலை முறையினர் சகோதரர்கள் நாலுபேர். ஐந்தாவது சகோதரராகக் கல்வியைக் கருதி அதற்கு ஒரு பாகம் ஒதுக்கினர். பெற்ரோரின் அடிச்சுவட்டில் இன்று ஜியார்ஜியும் தம் சொத்தில் ஐந்தாவது பங்கைக் கல்விக்கென்று ஒதுக்கிவிட்டார். அவரது கல்வி அறக் கொடையின் கீழ் கோயமுத்தூரிலும் மதுரையிலும் கல்லூரிகளும் பள்ளிகளுமாகப் பல இயங்குகின்றன. மொத்தம் எவ்வளவு என்று கணக்குப் பண்ண ஒரு கைவிரல்கள் போதாது. கிட்டத் தட்ட நாலாயிரம் மாணவ மாணவிகளுக்கு இந்த நிறுவனங் களில் கல்வி வசதி கிடைக்கிறது.

கோயமுத்தூரிலிருந்து பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ளது பெரியநாயக்கன் பாளையம். இந்தச் சிற்றூரில் தொழிலாளர் களும் ஏழை ஜனங்களுமே அதிகம். பயனீர் உயர்நிலைப் பள்ளி 1961ம் வருஷம் தொடங் கப்பட்டது.

இங்கு ஜியார்ஜி அறிவரங்கம் ஏழு லட்சம் செலவில் கட்டப்பட்டிருக்கிறது. இதனை அண்மையில் ராஜா சர் முத்தையா செட்டி யார் அவர்கள் தலைமையில் தமிழக பிரதம நீதிபதி இஸ்மாயில் திறந்து வைத்தார்.

⌘ ராஜா சர் முத்தையா செட்டியார் அறிவரங்கத்தை ஆசீர்வதிக்க, திறந்து வைக்கிறார் பிரதம நீதிபதி இஸ்மாயில்.
⌘ ஜி.ஆர்.ஜி. அறிவரங்கம்
⌘ அறிவரங்கம் திறப்பு விழாவின்போது பேசுகிறார் ஸ்ரீமதி சந்திரகாந்தி.

இங்கே பெண்கள் பாலிடெக்னிக் ஒன்றும் தொடங்க வேண்டும் என்பது ஜி. ஆர். கோவிந்த ராஜுலுவின் மனைவி ஸ்ரீமதி சந்திர காந்தியின் ஆசை. ஜியார்ஜிக்கோ இதை விடப் பெரிய ஆசை!

"கோயமுத்தூருக்கு விரைவில் ஒரு சர்வ கலாசாலை வந்துவிட வேண்டும். சர்வ கலா சாலை உருவாவதற்கு எனது 61வது பிறந்த நாள் அன்று நானும் எனது சகோதரர் ஜி. ஆர். தாமோதரனும் சேர்ந்து இருபது ஏக்கர் நிலமும் 25 லட்சம் ரூபாயும் கொடுத் துள்ளோம். விஞ்ஞான தொழில் நுட்ப மியூசியம் ஏற்படுத்தி, ஒரு Planetarium மும் தொடங்கவேண்டும் என்பது எங்கள் ஆசை. கோயமுத்தூரில் ஐந்து மைல் சுற்றளவில் நிறையக் கல்வி நிலையங்கள் இருக்கின்றன. மூன்று தொழில் நுணுக்கக் கல்லூரிகளும், நிறைய பாலிடெக்னிக்குகளும் உள்ளன. அவற் றுக்குத் தொழில் நுணுக்க மியூசியம் அவசி யம் தேவை" என்கிறார்.

**கோவைக்கு ஒரு பல்கலைக் கழகம் கோருகிறார் ஜி. ஆர். ஜி.**



கல்வி எப்படி அமைய வேண்டும் என்று ஸ்ரீமதி சந்திரகாந்தி கூறுகிறார்:

''பள்ளி மாணவப் பருவத்திலிருந்து கல்லூரிப் படிப்பு எய்தும் வரை மாணவ மாணவியர் கல்வியிலேயே முழு ஈடுபாடும் செலுத்தினால் அவர்கள் வருங்காலத்தில் நாட்டின் உயர்ந்த குடிமக்களாக உருவாக முடியும் என்று கருதுகிறேன். கல்வி நிலையங்களில் அரசியல் தலையீடு இல்லாமலிருந்தால் அவர்கள் செவ்வனே உருவாக முடியும் என்பதற்கு ஜியார்ஜி டிரஸ்டில் உருவாகியுள்ள கல்வி நிலையங்களிலேயே சான்று காண்கிறேன். ஒவ்வொரு துறையிலும் மாணவ மணிகள் சிறப்புற்று விளங்கி வருகிறார்கள். ஆசிரியர்கள் தலையீடு இல்லாமல் அவர்கள் தாங்களாகவே பொறுப்புணர்வுடன் நன்கு உருவாவதற்கு எங்கள் கல்வி நிலையங்கள் வாய்ப்பு அளிக்கின்றன. பிரின்சிபாலிலிருந்து கடைநிலை ஊழியர்கள் வரை அனைவரும் கல்வி நிலையங்களைத் தங்களது சொந்த நிறுவனமாகவே கருதிப் பாடுபட்டு வருவதுடன் ஒத்துழைப்பும் தருவது வெற்றிக்கு உறுதுணையாக இருக்கிறது. ஆசிரியப் பெருமக்கள் சிறந்த ஒழுக்கத்தோடு நடந்தால் தான் அவர்கள் எதிர்காலத்தின் சிறந்த செல்வங்களைச் சிறப்பாக உருவாக்க முடியும். பெற்றோர், மாணவர், ஆசிரியர், அரசியல் தலைவர்கள் நாட்டை வழிநடத்திச் செல்கின்ற ஆட்சியாளர்கள் அனைவருக்குமே வருங்காலச் சந்ததியை உருவாக்குவதில் பெரும் பங்குண்டு. இதை உணர்ந்து செயல்பட்டால் கண்டிப்பாக நம் எதிர்கால இந்தியா இன்றைய மாணவர்களால் பெருமை அடைய முடியும். அந்தக் காலத்து ஆசிரியர்களை மாணவர்கள் போற்றிக் கொண்டாடியதைப் போல் இன்றைய தலைமுறையும் எழுத்தறிவித்தவனை இறைவனாக மதிக்க வேண்டும். எங்கள் கல்வி நிலையங்களிலும் தொழிற்சாலைகளிலும் கூட முதலில் சுத்தம், ஒழுங்கு, கட்டுப்பாடு, ஒத்துழைப்பு, பின்பு தான் படிப்பு, உழைப்பு என்ற நிலை உள்ளது. இந்தக் குறிக்கோளுடன் செயல்படும்போது அதற்கு வெற்றியும் கிடைத்து வருகிறது.''

பி. எஸ். ஜி., ஜி. ஆர். ஜி. கல்வி நிறுவனங்களில் காணப்படும் இந்த ஆரோக்கியமான நோக்கினைக் காணும்போது கோவைக்கு ஒரு பல்கலைக் கழகம் என்ற கோரிக்கையும் விரைவில் நிறைவேற வேண்டியதுதான் என்று தான் நமக்கும் தோன்றுகிறது.

— பி. எஸ். எம்.

**மலை ஏறும் போட்டி**

30-3-80 ஞாயிறு காலை 6 மணிக்கு திருத்தணியிலிருந்து 12 கிலோ மீட்டர் தூரத்திலும் பொதத்தூர் பேட்டைக்கு அருகிலும் உள்ள கீசலம்குண்டு எனும் இடத்தில் நடைபெறும்.

விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்து போட்டியில் பங்கேற்கத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்குக் கடிதங்கள் அனுப்பப்பட்டுள்ளன.

# கடுகு பதில்கள்!




✠ க. குமரேசன், திருவாரூர்
கே. இறைவன் மனிதனுக்கு அளித்த நன்கொடை என்று எதைச் சொல்லலாம்?
ப: நகைச் சுவை உணர்ச்சியை. உலகில் பிறந்துள்ள பல்லாயிரக் கணக்கான ஜீவ ராசிகளில் சிரிக்கத் தெரிந்த ஒரே உயிரினம் மனிதன். நகைச்சுவை உணர்ச்சி இருந்தும் உலகில் இத்தனை பிரச்னைகள் ஏற்பட்டுள்ளன. இந்த உணர்ச்சியே இல்லாதிருந்தால் உலகம் நரகமாகியிருக்கும்.

✠ அண்ணா அன்பழகன், சந்தனப்பேட்டை
கே. சிறைச்சாலையை மாமியார் வீடு என்பதேன்?
ப: இலவசச் சாப்பாடு போடுவதால். ''உபசாரங்கள்'' செய்யப்படுவதால்.

✠ எஸ். முல்லைமணாளன், பவானிசாகர்
கே. ஜோக் - கேக் - எதுபிடிக்கும்?
ப: ஜோக்கைக் 'கேக்க'ப் பிடிக்கும்!

✠ எஸ். எம். சையத் அலி, விருத்தாசலம்
கே. முன் கோபத்தை அடக்க வழி?
ப: கோபப்படுவதே தவறு. முன் கோபப் படுவது அதைவிடத் தவறு. அவசரப்பட்டுக் காரண காரியங்களை ஆராயாமல் ஆத்திர மடைவது முன்கோபம். யாரோ ஓர் அறிஞர் (நானல்ல!) சொன்ன உபாயம்: கோபம் வரும்போது பத்துவரை நிதானமாக எண்ணுங்கள். அதற்கு பிறகும் கோப உணர்வு இருந்தால் கோபப்படுங்கள். பத்துவரை எண்ணும்போது உங்கள் மனமும் விஷயத்தைச் சீர்தூக்கிப் பார்த்து எண்ணுகிறது. இதன் காரணமாகப் பல சமயம் பத்து எண்ணி முடிப்பதற்குள் கோபம் ஆறிவிடுகிறது.

✠ ஆர். ராமன், செங்கோட்டை
கே. உமக்குப் பாடத் தெரியுமா? பாடும், கழுதை வராமல் பார்த்துக் கொள்கிறேன்.
ப: உமது உபாயம் எனக்குத் தெரியும். அந்தச் சமயம் நீரும் பாடுவீர். கழுதைகள் உம்மைச் சூழ்ந்துகொண்டுவிடும். என் பாட்டைச் சீந்தாது.

✠ த. இராமமூர்த்தி, ராசிபுரம்
கே. 'அரசு' என்று கூற இப்படி நடுங்குகிறீர்களே.
ப: நடுக்கம் அல்ல. பண்பாடு. 'அரசு'வே தான் யார் என்று தெரிவிக்கவில்லையே. அப்படியானால் அவருக்கே அவரைக் கண்டு நடுக்கம் என்று அர்த்தமா?

✠ சரோஜா ராஜாராமன், சென்னை-38
கே. மூன்று வருடமாக எனக்கும் கம்பளிப் பூச்சிக்கும் தகராறு. முருங்கைமரம் மாடி வீட்டுக்குச் சொந்தம். பூச்சிகள் மாடிக்குப் போகாமல் என் வீட்டையே படை எடுக்கின்றன. இதற்கு ஒரு பரிகாரம் சொன்னால் ஆயுள் முழுதும் கடுகு பதில்களைப் படித்துக் கொண்டிருப்பேன்.
ப: தினமும் கடுகு பதில்களை உரக்கப் படித்துப் பாருங்கள். கம்பளிப் பூச்சி ஓடிவிடலாம். அல்லது வீட்டில் பாம்பு வளர்க்கலாம். கம்பளிப் பூச்சிக்காகப் பாம்பு வருகிறது என்று கதை கட்டி விடுங்கள். பாம்பையும் மாடிப் பக்கம் விடுங்கள். முருங்கை மரத்தின் மீது ''இங்கிருந்த முருங்கை மரம் அடுத்த தெருவுக்கு மாற்றப்பட்டு இருக்கிறது'' என்று எழுதி மாட்டுங்கள். இதைப் பார்த்துக் கம்பளிப் பூச்சிகள் அடுத்த தெருவை நோக்கிப் போய் விடும். கடைசியாகக் கம்பளியின் தரத்தைச் செக் பண்ண 'வுல் மார்க்' அதிகாரிகள் வருகிறார்கள் என்ற பீதியைப் பரப்பிவிடுங்கள். கம்பளிப் பூச்சிகள் ஓடி விடும்.

✠ எஸ். வெங்கடேசன், திருச்சி-8
கே. ஒரு முறையாவது பரிசு தரமாட்டீர்களா?
ப: ஒரு தபால் கார்டில் 59 கேள்விகள் எழுதி அனுப்பியிருக்கும் உங்களுக்குப் பரிசு தருவதைவிடப் பாராட்டுத்தருவதே சிறந்தது.

✠ ஆ. சீனிவாசன், திருச்செந்தூர்
கே. திருச்செந்தூருக்கு வந்தது உண்டா? கவர்ந்த அம்சம்?
ப: அமரர் தேவனின் எழுத்துக்களால் முருக ஸ்தலங்கள் மீது மையல் கொண்ட நான், ஒரு தரம் திருச்செந்தூருக்கு வந்திருக்கிறேன். அலைபாயும் மனங்களுக்கு அலைபாயும் கடற்கரைக் கோயில் அமைதி தருகிறது. கோயிலின் குட்டி யானை ரொம்ப அழகாக இருந்தது. ஆனால் கோயிலை ஒட்டி அவ்வளவு அசுத்தம் செய்யப்படுவதைத் தடுப்பாரில்லையே!

✠ முராரி சேஷாத்திரி, செங்கற்பட்டு
கே. நகைச்சுவை நடிகர்களில் (தமிழ்) தங்களைக் கவர்ந்தவர் யார்?
ப: வசனங்களை இயல்பாகச் சரியான குரல் ஏற்ற இறக்கத்துடன் பேசுபவர்: வி.கே. ராமசாமிதான். 'நாம் இருவ'ரிலிருந்து இன்றுவரை வி. கே. ஆரின் நகைச்சுவை நடிப்பு ரசிக்கக் கூடியதாக இருக்கிறது. தங்கவேலுவும் மெருகு குறையாமல் நடிக்கிறார்.

ரூ. 5. பரிசு பெறுபவர்:

**எஸ். எம். சையத் அலி**
**165, கடை வீதி.**
**விருத்தாசலம்-606001**




அலை ஓசை கருத்தரங்கு

# வாழ்வு ஓர் உண்மையான கனவு

## டாக்டர் கா. செல்லப்பன்

'அலை ஓசை' — ஓர் அமர காவியம்:

'தன்னுடைய படைப்புக்களில் தலையானது' என்று கல்கியாலே கருதப்பட்டு, 'அதற்குக் குறைந்தது ஆயுக நூறு' என்று அவராலேயே ஜாதகம் கணிக்கப்பெற்ற 'அலை ஓசை' உண்மையில் ஓர் அழிவற்ற அமர காவியம்

புதிய இந்தியாவின் பிறப்பு வேதனை (Birth pangs) இந்தக் காவியத்தின் வரலாற்றுப் பின்னணி. தனி மனிதர் வரலாற்றிலும் தேசிய வரலாற்றிலும்' சில நிகழ்ச்சிகளும் சில இடங்களும் திரும்பத் திரும்ப வருவதாகக் கதாசிரியர் காட்டுவதில் இந்தியர்களின் 'சுழற்சி வரலாற்றுத் தத்துவம்' (Cyclical view of history) தெரிகிறது.

இன்னொருத்தியைப் பார்க்க வந்தவரை தன் அகன்ற விழிகளால் விழுங்கி அவரை மணம் செய்து கொள்ளும் சீதா, இறுதியில் காந்திய அலையால் இழுக்கப்பட்டு, அவரது இறுதிப் பயணத்திலும் கலந்து கொண்டு கஸ்தூரிபாயைத் தேடிச் சொர்க்கத்துக்குச் செல்லும் அளவுக்கு உயர்ந்தாலும், அவள் அடிப்படையில் ஒரு சாதாரணப் பெண்தான். மானுடத்தின் மகத்துவத்தை மானுடத்துக்குக் காட்ட வந்த மகாத்மா, இந்த நாட்டிலே செய்த மாபெரும் புரட்சி, சாதாரணத்தின் அசாதாரணத்துவத்தை உணர்த்தியதுதான். சீதாவின் கதையிலும் காதிக், (Gothic) பிக்கரெஸ்க் (Picaresque) கதைகளைப் போல் அதிசய நிகழ்ச்சிகள் நடந்தாலும், அவை அவளது இயல்புக்கு முரண்பட்டவையன்று. அவளது காலப் பின்னணியில் இயல்பான நிகழ்ச்சிகளே. காந்தியம் என்ற மாபெரும் அலை சாதாரண மனிதர்களைச் சரித்திரத்தோடு சம்பந்தப்படுத்தியதற்குத்தான் கல்கி கலை வடிவம் கொடுத்திருக்கிறார். 'ஆள் மாறாட்டம்' போன்ற உத்திகள் கதை முழுவதும் விரவி, கதையின் 'சஸ்பென்ஸை' மாத்திரம் பெருக்கவில்லை; கதாநாயகி சீதாவும், தாரிணியும் தாம் யார் என்று ஆத்மீக ரீதியாகவும் தங்களைத் தாங்களே தேடி (Search for identity) அலைவதையும் காட்டுகிறது: சாதாரணக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்ததாகத் தோன்றிய கதாநாயகி, கடைசிக் கட்டத்தில் ராஜகுமாரியாகத் தெரிய வருவது 'ரொமான்டிக்' கதைகளின் இயல்பு. ஆனால் 'அலை ஓசை'யின் கதாநாயகிகள் இடையிலே ராஜ குடும்பத்தோடு இணைக்கப் பட்டாலும் இறுதியில் அவர்கள் சாதாரணமானவர்கள் என்று காட்டப்படுவதில் ஒரு புதுமையும் இருக்கிறது. ஒரு வகையில், — துவக்கத்தில் சீதா சாதாரணப் பெண்ணாகவும் தாரிணி அவளது அசாதாரண வடிவாகவும் (Heoric counterpart) தோன்றுகிறார்கள். இறுதியில் சீதா அசாதாரணமான வளாகவும், தாரிணி வீட்டுப் பெண்ணாகவும் மாறுகிறார்கள்.

இதில் உள்ள தத்துவ விளக்கத்தைக் கதாசிரியர் கனவுக்கும் உண்மைக்கும் உள்ள தொடர்பு மூலம் பல இடங்களில் காட்டுகிறார். கனவு கதையின் பல முக்கிய



**On The Spot**

**வெளிப்புறப் படப்பிடிப்பின்போது அனுபவங்கள்**

**கல்கி வழங்கும் புதிய அம்சம்**

எழுதுபவர்: 'சலன்'

**விரைவில் ஆரம்பமாகிறது—**

இடங்களில் வருகிறது: ஒவ்வொரு நிலையிலும் அது உண்மையின் முன்னோடியாகவும் அமைகிறது. எப்படி ஆடம் (Adam) கனவிலிருந்து விழித்தபோது உண்மையை உணர்ந்தானோ, அப்படிக் கதாபாத்திரங்களும் உண்மையை உணர்கின்றனர். சீதா கேட்ட அலை ஓசையும் கனவாகத் துவங்கிக் கனவாக முடிந்தாலும் அது ஓர் உண்மையான கனவு—வாழ்வும் ஒரு உண்மையான கனவுதான். இந்தக் கருத்து, சீதா ஏரிக்குள் விழுந்து எழுந்தபோது மிகத் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. கனவிலிருந்து உண்மைக்கு விழித்தெழுகின்ற சீதாவுக்கு 'உலகம் உண்மை' என்ற உண்மை, கீட்ஸ்—பாரதி பாணியில் தெரிகிறது. ''தான் இன்னும் ஜீவித்திருப்பது உண்மை. எதிரே தோன்றிய நீல நிற ஏரியும் உண்மை. பசுந் தளிர் விருட்சம், வெண்ணிறப் பறவைகள் இவையெல்லாம் உண்மை. தூரத்தில் இருண்டு வந்த இடத்தில் வானம் குனிந்து பூமியைத் தழுவுவதும் உண்மை. தான் ராகவன் மடியில் படுத்திருப்பதும் உண்மை. எதிரே ஈரப் புடவையுடனும், கருணை நிறைந்த முகத்துடனும் தாரிணி உட்கார்ந்திருப்பதும் உண்மை. படகு உண்மை, மோட்டார் கார் உண்மை, புது டில்லி பங்களாவில் மாமியாரிடம் விட்டு வந்திருக்கும் தன் அருமைக் கண்மணியும் உண்மை. ஆகா, இந்த உலகம் எவ்வளவு ஆனந்த மயமானது!'' என்று அவள் கூறுவது, மானுடம் வாழ்வுக் கனவின் உண்மையை உணர்வதற்கு எடுத்துக் காட்டு. அவள் வாழ்க்கை இன்னொரு நிலையிலும் தாஜ்மஹால் போன்ற கனவுகளிலிருந்து காந்தி மகாத்மா என்ற உண்மை நோக்கி உயர்கிறது. தாரிணியும் குரூபியான நிலையிலே வாழ்வின் உண்மையை உணர்கிறாள்.

கதையும், சாதாரண நிலையில் ராஜம்பேட்டையின் சலங்கை ஓசையோடு துவங்கி, உயர உயரப் பறந்துவிட்டு, பிறகு பிறந்த மண்ணுக்கே வந்து அடக்கமாக முடிகிறபோது, அங்கே நமது பழைய பாலகிருஷ்ணனைப் பார்க்கும்போது, காலமும் கடவுளும் புறச் செயல்களைப் பொருட்படுத்தாமல் கடிகார முள் போல் தொடர்ந்து கடமையாற்றுவதைக் காட்டி, எல்லாக் கனவுகளும் மண்ணின் சத்தியத்தில் முடிவு பெறுவதைக் காண்கிறோம். அதேபோல் சூர்யா இலட்சிய புருஷனாக உயர்ந்தாலும் அவனிடத்திலும் சாதாரணத் தன்மை இல்லாமல் இல்லை. அவனுடைய சுதந்திரத் தாகமும், சீதாவைக் காக்கும் கடமை உணர்வும், ஒரு வகையில் அவனுடைய ஆசைகளின் உயர்நிலையே. (Sublimation) அவை அவனுக்கு ஒரு மாற்று மன நிறைவை (Substitute gratification) தருகின்றன எனக் கூறினும் தவறில்லை. லலிதாவை மணக்க வந்த மாப்பிள்ளை சீதாவை மணக்க முடிவு செய்ததாகத் துவங்கிய 'ஆள் மாறாட்டக்' கதை, குரூபியாய் மாறிவிட்ட தாரிணியோடு வருவதாக இருந்த சூர்யா, பாமாவோடு விஜயம் செய்வதாக முடியும்போது, சக்கரம் முழுக்கச் சுற்றி, இலக்கிய தார்மீகமும் (Poetic justice) நிலை நிறுத்தப்படுகிறது. ஓர் ஆள் மாறாட்டத்துக்கு இன்னோர் ஆள் மாறாட்டம் விடையாக அமைந்து, மனித ஜாதியின் ஒருமையும் விளக்கப்படுகிறது.

கதையின் கருத்தாழத்துக்கும் கலையழகுக்கும் முத்தாய்ப்பாய்த் திகழ்வது, அதன் தலைப்பு. ''சுந்தா'' அவர்கள் குறிப்பிட்டிருப்பது போல 'அலை ஓசை' கல்கியின் இளமை அனுபவத்தால் அவர் ஆழ் மனத்தில் வேரூன்றிய ஓர் இமேஜ். அதைக் கதாநாயகியின் வாழ்வுப் போராட்டத்தோடு இணைத்து, ஒரு பொதுமையான கலைப் படிமமாக (Universal Symbol) மாற்றியுள்ளார். நெஞ்சின் அலைகளை நீலக் கடலலைகளாகக் கண்ட கவிஞர் மரபிலே வந்த கல்கி, அலை ஓசையை ஒரு கதாபாத்திரமாகவே 'வளர்த்துள்ளார்.' பல்வேறு விளக்கங்களைத் தாங்கும் சக்தி படைத்த இந்தப் படிமம், கதையின் பல்வேறு கட்டங்களைப் பிணைக்கும் சங்கிலியாக மட்டுமின்றிக் கதாநாயகியின் மன வளர்ச்சியைக் காட்டும் கண்ணாடியாகவும் அமைகிறது. சீதாவின் காதுகளில் வேறு எதையும் கேட்க விடாது ஒலித்துக் கொண்டிருந்த அலை ஓசை அடங்கி, டில்லியிலே காற்றினிலே மிதந்து வந்த காந்தியின் கருணை மொழிகளைக் கேட்டபோதுதான் முழுமை அடைகிறது. தெய்வீகக் கருணையை உணரும்போது, வாழ்வும் சாவும் அச்சமாய் இருந்தது போய் அழகாய் மாறுகின்றன. நாம் உணராதபோது விதியின் இரும்புப் பிடியாகத் தோன்றுவது, நாம் உணரும்போது தெய்வீகக் கருணையாகத் தெரிகிறது. இளமையிலிருந்து அவள் இதயத்தில் ஒலித்த அலை ஓசை, துன்பமாகவும்

சாவாகவும் மாறு வேடம் போட்டு வந்த இறை அருள்தான்.

ஆனால் இவ்வளவு கருத்தையும் கலையாகப் படைத்ததிலேதான் இதற்குச் சிறப்பு. இந்த நாவலில் உரையாடல், வருணனை, கதை சொல்லல் ஆகிய அனைத்தும் அளவோடு கலந்து வளமோடு வாழ்கின்றன.

'அலை ஓசை'க்கு அதன் ஆசிரியர் கணித்த ஆயுக ஓர் அடக்கமான கணிப்பே என்பது நம் அடக்கமான முடிவு!

## கல்கி தரும் செய்தி

### ஆ. கணேசன்

**ப**தினெட்டு ஆண்டு கால வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு மிகப் பெரிய அளவில் நாவல் அமைந்திருந்தாலும் முதல் இரண்டு பாகங்களை விட, பின் இரண்டு பாகங்களிலேயே அரசியல் நிகழ்ச்சிகளை அதிகமாகக் காண்கிறோம். நாவலில் பல அரசியல் நிகழ்ச்சிகளைக் கூறிச் சென்றாலும் அவைகளைக் கதையின் சுவை குறையாமல் கூறிச் செல்வதில்தான் கல்கியின் தனித் தன்மையே இருக்கிறது. இதனால் அரசியல் நிகழ்ச்சிகள் கதையின் போக்கிற்கு இடையூறாக இருப்பதில்லை. ''ஒரு நல்ல இசைக் கச்சேரியைக் கேட்டு அனுபவித்துக் கொண்டிருக்கும்போது இடையில் ஒரு துப்பாக்கி வெடி கேட்டால் எப்படி இருக்குமோ அப்படிப்பட்டதுதான் இலக்கியத்தில் அரசியல் வருவதும்'' என்று ஸ்டெந்தல் (Standhal) கூறும் கருத்து. கல்கியின் ''அலை ஓசை''யைப் படிக்கும் போது பயனற்ற கூற்றாகவே தோன்றுகிறது.

## அனுபவப் பிழிவு

**ஒ**ரு கதாசிரியனின் வெற்றி, தாம் படைக்கும் கதைமாந்தர்கள் வாசகர்களின் நெஞ்சில் எவ்வளவு தூரம் நிலைத்து நிற்கிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் அமைகிறது. கல்கி ''அலை ஓசை''யில் படைத்தளித்த கதை மாந்தர்கள் ஒவ்வொருவரும் தனித் தன்மையால் வாசகர்களின் மனத்தில் இடம் பெறுகின்றனர்.

காந்தியடிகளிடம் கல்கி கொண்டிருந்த ஈடுபாட்டின் காரணமாக காந்தியடிகளைப் பற்றிப் போற்றுதல்களையும், தூற்றுதல்களையும் படைத்துக் காட்டியுள்ளார். காந்தியடிகளைத் தெய்வமாகப் போற்றக் கூடிய கதாபாத்திரத்தையும், ''காந்தியின் செல்வாக்கு இருக்கிறவரை இந்தியா ஒரு நாளும் உருப்படப் போவதில்லை'' என்று கூறும் கதாபாத்திரத்தையும் படைத்தளித்துள்ளார். ''காந்தியத்தில் நம்பிக்கையில்லாத ஒரு பாத்திரம் மகாத்மா காந்தியின் செயல்களைப் பற்றிக் குறை கூறும்பொழுது, அதனால் விளையும் விவாதத்தின் மூலமாக காந்திய நெறியின் பெருமையைக் கல்கி தெளிவாக விளக்குகிறார்'' என்று கூறும் பெ. கோ. சுந்தரராஜனின் கருத்து கவனத்துக்குரியது.

''அலை ஓசை''யின் சிறப்புக்கு மற்றொரு காரணம், தாம் கண்ட அனுபவங்களின் அடிப்படையில் கல்கி நாவலை அமைத்திருப்பதுதான். நாவலில் வரும் பல்வேறு நிகழ்ச்சிகள் கல்கியின் வாழ்க்கையில் நடந்த முக்கிய சம்பவங்களின் தொகுப்பாகவே உள்ளன.

கராச்சி காங்கிரஸுக்கு கல்கி செல்கையில் கராச்சியில் ஒரு குட்டி விமானத்தில் பயணம் செய்தார். அதனை மனத்தில் பதித்துக் கொண்டு கதைத் தலைவன் ராகவனை விமானத்தில் ஏற்றிப் பறக்கச் செய்கிறார்.

அதுபோல் கவர்னர் ஜெனரலாக ராஜாஜி பதவி ஏற்றபின் அவ்விழாவில் கலந்து கொண்ட கல்கி மற்றும் நண்பர்கள் நகரின் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தார்கள். அப்போது அவர் கண்ட குருக்ஷேத்திரம், பானிபட், புராணகிலா போன்ற இடங்களில் அகதிகள் தங்கியிருந்த முகாம்கள், காந்தியடிகள் சுட்டு வீழ்த்தப்பட்ட பிர்லா மாளிகைத் தோட்டம், அவருக்குத் தகனக் கிரியை நடந்த யமுனைக் கரை முதலியன ஒரு சிறந்த ஆசிரியரின் கைவண்ணத்தால்



அடடா என்ன சுகம்!

பிளஸ் டு பரீட்சைகள் முடிந்தன.

'விடுதலை பெற்றோம்' என்று மகிழ்வர் மாணவ மாணவியர்.

பட்டப் படிப்புப் பரீட்சை எழுத வேண்டி விருப்பவர்கள் தம்பி தங்கையரைப் பார்த்துப் பெருமூச்சு விடுவர். 'எப்போது நம் தேர்வுகளும் முடியும்? என்று விடுதலை பெறுவோம்?' என ஏங்குவர். கற்பனையிலே விடுமுறைக் காட்சிகள் சில விரியும்.

அத்தகைய கனவுக் காட்சி யொன்றை நிஜமாக்குகிறார் மேலட்டையில் **பிரீதா**.

ஊஞ்சல் போன்ற வலைத் தூளி. 'ஹாமாக்' என்பர். இரு மரக் கிளைகளுக்கிடையே கட்டி விட்டால் நிழலுக்கு நிழலாயிற்று; காற்றுக்குக் காற்றாயிற்று. படுக்கையாயிற்று. ஊஞ்சலாகவும் விளங்குகிறது!

தாக சாந்திக்கு ஐஸ் கட்டி மிதக்கும் லைம் ஜூஸ்; கொறிப்பதற்குக் கொஞ்சம் சீடை, முறுக்கு. படிப்பதற்கு மில்ஸ் அண்டு பூன்! அடாடா என்ன சுகம்!

ஒரு தகவல்: மில்ஸ் அண்டு பூன் என்பது புத்தக வெளியீட்டு நிறுவனம். பல்வேறு எழுத்தாளர்களைக் காதல் நாவல்களாக எழுதச் சொல்லி அடிக்கடி வெளியிடுகிறது. லேட் ரீடிங்குக்குக் கல்லூரி மாணவியரிடையே ரொம்பப் பாப்புலர்.

வண்ணப்படம் எடுத்தவர்: **உத்ரா**

மேலும் பொலிவு பெற்றுத் திகழ்கின்றன. எனவேதான் சுந்தா, ''நாவலில் வரும் அந்தக் காட்சிகளிலும், அவற்றில் நிகழும் சம்பவங்களிலும் ஒரு 'ஆவணத் தன்மை' (A documentary nature) இருப்பதை உணரலாம்'' என்று கூறுகிறார்.

## அலை ஓசை - ஒரு குறியீடு:

கல்கி சிறு பையனாக இருந்தபோது, ஒரு நாள் பள்ளிக்கூடம் விட்டவுடன் குளத்தி னருகே சென்றார். தவறிக் குளத்தினுள் விழுந்து விட்டார். அதிருஷ்டவசமாகக் காப்பாற்றப்பட்டார்.

இந்த விபத்தில் பிழைத்த அனுபவத்தையே ஒரு குறியீடாக நாவலில் பயன்படுத்தி உள்ளார். ''தனித்த நிலையில் ஆய்ந்து காணும்போது இரண்டாட்ட உள்ளத்தில் எதிர்நிலைக் காட்சியாகவும், பொது நிலையில் காணும்போது இந்திய மக்களின் உள்ளத்தில் தோன்றிய — கட்டறுத்து விடு படும் பிரளய உணர்ச்சியின் குறியீடாகவும் அலையின் ஓசையை நாம் கொள்ள இடமுண்டு'' என்று டாக்டர் மா. இராமலிங்கம் கூறுகிறார்.

## நடைப் பாங்கு:

இயற்கை வருணனையும், நகைச்சுவையும் ''அலை ஓசை''யினைச் சிறப்பிக்கின்றன.

திருமணம் நிச்சயமானவுடன் லலிதா, சீதா ஆகியோரின் மனநிலையை எப்படி வருணிக்கிறார் பாருங்கள்:

''பசும்புல் தரையில் அழகிய பட்டுப் பூச்சிகள் வர்ணச் சிறகுகளை அடித்துக் கொண்டு அங்கு மிங்கும் சஞ்சரிப்பதைப் போல் அவர்கள் இந்திரபுரியின் நந்தவனத்தில் யதேச்சையாக அலைந்து திரிந்தார்கள். தேவலோகத்தில் பாரிஜாத மரங்களிடையே அவர்கள் தேன் வண்டுகளாக உலாவித் திரிந்து பாரிஜாத புஷ்பங்களில் கசிந்த இனிய தேனைத் தேவாமிருதத்தோடு பருகி மகிழ்ந்தார்கள்.....''

இன்னின மகாசபையில் வம்பளக்கும் அப் பாத்துரை சாஸ்திரிகள் சூர்யாவின் சமதர்மக் கருத்துக்களை எதிர்க்கும் வகையில்,

''இன்றைக்கு 'உழுகிறவனுக்கு' நிலம் என்பார்கள் அறுக்கிறவனுக்கு நெல் என்பார்கள்' அப்புறம், 'கொத்தனுக்கு வீடு', 'வண்ணானுக்கு வேஷ்டி'; 'டிரைவருக்கு மோட்டார்', 'டாக்டருக்கு மருந்து','போர்ட்டருக்கு ரயில் வண்டி' என்றெல் லாம் ஏற்படும். சமைக்கிறவனுக்குத்தான் சாதம் என்று சொன்னாலும் சொல்வார்கள். விநாச காலே விபரீத புத்தி.''

## தேசிய நாவல்

தமிழில் முதன் முதலாக வெளியான தேசிய நாவல் ''அலை ஓசை'' எனலாம். விடுதலைப் போராட்டத்தில் கல்கியின் பங்கு காந்தியடிகளிடம் கொண்ட பக்தி ஆகியவை நாவலுக்கு நல்ல உரமாக அமைந்தன.

அரசியல், சமுதாய, பொருளாதார விழிப்புணர்ச்சிகளை மக்களிடத்தில் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் நாவல் படைக்கப்பட்டுள்ளது.

நாவலின் முடிவில் சூரியாவின் மூலம், கல்கி கூறுகையில், ''இனிமேல் தேசத்தில் செய்ய வேண்டியதெல்லாம் பொருள் உற்பத்தியும், உணவு உற்பத்தியும்தான். முதலில் நம்முடைய சொந்தக் கிராமத்திலிருந்து ஆரம்பிக்க உத்தேசித்திருக்கிறேன். உழுது பாடுபடுகிறவர்களுக்கு உற்சாகம் ஊட்ட வேண்டும்'' என்கிறார். இதையே கல்கி தரும் செய்தியாகக் கொண்டு உழைப்போம்; உயர்வோம்.

---

# கரும்புவில்

பட விமர்சனம்



பி. எல். ராயின் ஒளிப்பதிவில் மலைகள், காடுகள், ஆறு, அருவி எல்லாம் கண்ணுக்கு இனிமையான வண்ணக்காட்சிகளாய் மலர்கின்றன. சத்தான கதை விருந்தாய் அந்த மலைச்சியின் மணமும் வீசியிருக்கும்! என்னவோ, நாகதேவதை, பூகம்பம், அது இது என்று சாரம் இல்லாமல் கதையளந்திருக்கிறார்கள். ஒன்றுமே மனதில் பதியவில்லை!

மலைநாட்டுப் பூசாரிப் பெண்ணின் முரட்டுக் காதல் சுதாகருக்குக் கிட்டுகிறது. அவருக்கும் பாம்பாட்டி வேஷம். சுபாஷிணி மலைநாட்டுப் பெண்ணாக, கவர்ச்சியாக நடித்திருக்கிறார்.

படத்தின் டைரக்டர், விஜய் இத்துறைக்குப் புதுசு. நல்லதொரு கதையை இயக்கும் வாய்ப்பு! அவருக்குக் கிடைத்தால்தானே அவர் திறமையை எடை போடலாம்?

சுதாகரும், சுபாஷிணியும் ஆடிப்பாடும் ''மீன் கொடி தேரில் மன்மத ராஜன்'' என்ற எம். ஜி. வல்லபனின் பாடலில் இளமை ஊஞ்சலாடுகிறது.

கரும்பு, முழுக்க முழுக்க இனிப்பதில்லை; கொஞ்சம் கசப்பதும் உண்டு.

—காந்தன்

# ஒலியை விஞ்சும் வேகம்!






ஒலியின் வேகத்தை விட வேகமாகச் செல்லும் விமானங்கள் இப்போது சகஜமாகிவிட்டன. முதல் முறையாக பூமியிலேயே ஒரு ராக்கெட் காரை ஒலியை விட வேகமாகச் செலுத்திச் சென்றுள்ளார் ஸ்டான் பார்ரெட் என்ற அமெரிக்கர். கலிபோர்னியாவில் எட்வர்ட்ஸ் விமானப்படை தளத்தில் மணிக்கு 1189 கிலோ மீட்டர் வேகத்தில் சென்று இச்சாதனையை நிகழ்த்தினார். ராக்கெட் காருக்குள் இருக்கும் அவரிடம் வெளியே இருந்தபடி பேசுபவர், முன்பு இதே விமானத் தளத்தில் ஒரு விமானத்தினை முதல் முறையாக ஒலியை விட வேகமாகச் செலுத்திச் சாதனை புரிந்த சக் ஈகர்.

# ஒரு தேசபக்தனின் தேசிய நாவல்

**எம். ஏ. சுசீலா**

"நான் எழுதிய நூல்களில் ஏதாவதொன்று ஐம்பது அல்லது நூறு வருடம் நிலைத்து நிற்கக் கூடிய தகுதி யுடையதென்றால் அது அலை ஓசைதான் என்ற எண்ணம் என்னுள்ளே உதயமாயிற்று.

ஏறக் குறைய முப்பது ஆண்டுகளாகத் தமிழ்த் தாய்க்குப் பய பக்தியுடன் இயற்றி வந்திருக்கும் பணிகளுக்குள்ளே இதுவே சிறந்தது.''

ஒரு நாவலாசிரியர் என்ற நிலையில் மட்டுமே நின்று தம் படைப்புக்களை மதிப்பீடு செய்திருந்தால் இப்படிப்பட்ட ஒரு கூற்று 'கல்கி'யிடமிருந்து வெளிப்பட்டிருக்குமா என்பது ஐயத்துக்குரியதே! நாட்டு விடுதலை என்னும் மாபெரும் வேள்வித் தீயில் புடமிடப்பட்ட தேச பக்தராகவும் 'கல்கி' திகழ்ந்தார் என்பதாலேயே 'அலை ஓசை' அவரை இந்த அளவுக்கு ஈர்த்துள்ளது எனத் துணியலாம்.

பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் என்னும் மூன்று நாவல்களும் தமிழ் வாசகர்கள் நெஞ்சங்களில் சாகாவரம் பெற்றவையாய் என்றென்றும் நிலைத்திருக்கும் கருத்தோவியங்கள். இவற்றுள் ஒன்றினுக்கேனும் வழங்காத ஓர் அந்தஸ்தினைக் 'கல்கி' 'அலை ஓசை'க்கு மட்டும் வழங்கி யிருப்பதேன்?

வரலாற்று நாவல்களை உருவாக்குவதில் 'கல்கி'யின் நோக்கம் என்ன என்பதைப் புரிந்து கொண்டால் இவ் வினாவுக்கு எளிதாக விடை கிடைத்து விடும்.

'கல்கி'யின் நாவல்கள் அனைத்துமே நாட்டுப் பற்றால் ஆனவையாகவும், நாட்டுப் பற்றை ஆக்கியவையாகவும் விளங்குவன. காலத்தாலும், சிறப்பாலும் முதல் வரலாற்று நாவலாசிரியராகிய 'கல்கி', தம் வரலாற்று நாவல்களைக் கூடத் தேச பக்தியை விதைத்து விடுதலை எழுச்சியை அறுவடை செய்வதற்கே பயன்படுத்தினார். சுதந்திரக் கனலைப் பரப்ப 'பாஞ்சாலி சபதத்தை'க் கருவியாக்கிய பாரதியாரை அடியொற்றியே 'கல்கி' அவர்களும் தம் வரலாற்று நாவல்களை உருவாக்கியுள்ளார். போர், ஆட்சி, கலை, சமயம் முதலிய பல துறைகளிலும் தன்னிகரற்றுத் திகழ்ந்த தமிழகத்தின் மகோன்னதமான வரலாற்றுப் பகுதிகளைப் படைத்துக் காட்டுவதன் மூலம் அச்சமும், பேடிமையும், அடிமைச் சிறுமதியும் உச்சத்தில் கொண்டு உழன்று கொண்டிருந்த தம் காலத்துத் தமிழ் மக்களை ஆண்மை மிக்கவர்களாக மாற்றுவதே 'கல்கி' வரலாற்று நாவல்களை இயற்ற முழு முதற் காரணமாக அமைந்தது.

நாடு விடுதலை பெற்ற பின்னர் — எழுத்துக்கு எவ்விதமான தடையும் கட்டுப்பாடும் அற்ற சுதந்திரமான சூழலில் — எண்ணியதை எண்ணியாங்கு வெளியிட வாய்ப்புக் கிட்டிய பிறகு உருவாகிய நாவல் 'அலை ஓசை'. வரலாற்று நாவல் துறையில் ஊறித் திளைத்த 'கல்கி', 'அலை ஓசை'யினையும் வரலாற்று நாவலாகவே படைத்தளிக்க எண்ணங் கொண்டார். பழங்கால வரலாற்றை ஆதாரமாகக் கொண்டு எழுதப்படுபவை மட்டும் வரலாற்று நாவல்கள் அல்ல; நிகழ்கால நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்ட நாவல்களும் வரலாற்று நாவல்களே. இந்தக் கண்ணோட்டத்தில் 'அலை ஓசை' நாவலைச் சமகால வரலாற்று (Contemporary history) நாவலாக ஏற்கலாம். மறைமுகமாகப் பழைய வரலாறுகளைக் கூறித் தேசிய எழுச்சியூட்ட முனைந்தபோதெல்லாம் கிடைக்காத மன நிறைவை — ஆத்ம திருப்தியை நேரடியாக 'அலை ஓசை' வாயிலாகக் கூறிய போது 'கல்கி' பெற்றிருக்க வேண்டும்.

அண்ணல் காந்தியிடம் அளவற்ற ஈடுபாடு கொண்ட 'கல்கி' அவர்கள் காந்தியடிகளைப் பற்றிய பல கருத்துக்களை நாவலில் பாத்திரங்களின் கூற்றாகப் பதிவு செய்கிறார். அனைத்துக்கும் மேலாக அண்ணலின் இறுதி யாத்திரையினை விரிவாக — உணர்ச்சி பொங்கக் கண்களில் நீர் ததும்ப அவர் கூறிச் செல்லுகையில், காந்தியடிகளைப் பிரிந்த தம் ஆற்றாமை உணர்வுகளை வெளியிட நாவலை ஒரு வாய்ப்பாக ஆசிரியர் பயன்படுத்துகிறார் என்றே எண்ணத் தோன்றுகிறது.



## "காக்கைச் சிறகினிலே..."

பிரபல ஓவியர்—கார்டூனிஸ்ட் ஆர். கே. லக்ஷ்மணன் காக்கைகளை ஓவியமாகத் தீட்டுவதில் மிக ஈடுபாடு கொண்டவர். காகத்தைப் பல்வேறு நிலையிலும் பாவத்திலும் வரைவது அவருக்கு மிகவும் பிடித்தமான விஷயம். 1972ல் ஜஹாங்கீர் மியூஸியத்தில் அவர் வரைந்த காக்கைகளைப்பற்றிய 25 சித்திரங்கள் கொண்ட ஒரு கண்காட்சி நடைபெற்ற போது, முதல் நாளிலேயே அத்தனை படங்களும் விற்றுப் போய்விட்டன. (ஒவ்வொன்றும் விலை ரூபாய் ஐநூறு) ஐரோப்பாவிலும் ஜப்பான், அமெரிக்கா போன்ற நாடுகளிலும் பல பிரமுகர்களின் வீட்டு வரவேற்பறைகளில் லக்ஷ்மணனின் காக்கைகள் அழகு செய்கின்றன. ஓர் அமெரிக்கர் தாம் புதிதாகக் கட்டிய வீட்டின் ஒவ்வொரு அறைக்கும் ஒரு காகம் வரைந்து தருமாறு கேட்டிருந்தார். -எம். சிவசுப்ரமணியன்

விடுதலைக்குப் பின் எழுந்த சுதந்திரப் போராட்ட நாவல்களில் 'அலை ஓசை' முதலிடம் பெற்றுத் திகழுவதற்குக்காரணம் தேசியப் போராட்டத்தில் தாமும் ஓர் அங்கமாய் விளங்கிய 'கல்கி', இந்நாவலை எழுதினார் என்பதுதான். இதே காரணத்தால் அவர் இதை நேசித்ததிலும் வியப்பில்லை.

வரலாற்று நாவலில் ஆசிரியரின் சொந்தக் கொள்கைகள் வெளிப்பட வாய்ப்பில்லை. ஆயின் சமகால நாவலாகிய 'அலை ஓசை' யைச் சமூகம், பொருளாதாரம், அரசியல் முதலியன பற்றிய தம் கணிப்புக்கள், விருப்புக்கள், கொள்கை விளக்கங்கள் — இவற்றுக்கான வடிகாலாகவே பயன்படுத்துகிறார் 'கல்கி'. இந்நாவல் மீது அவர் கொண்டுள்ள அளவிறந்த ஈடுபாட்டுக்கு இதுவும் ஒரு காரணமெனலாம்.

காலத்துக்கேற்ப சமூகப் பழக்க வழங்கங்களும் மாற வேண்டும் என்ற தம் விழைவை நாவலில் பல இடங்களில் வெளியிடுகிறார் 'கல்கி'. சமதர்மக் கொள்கைகள் சூரியா வாய் மொழியாகக் கூறப்படுகின்றன.

வரலாற்றுக் கதைகளை எழுது முன்னர் கதை மாந்தரின் கால் பட்ட இடங்களுக்குச் சென்று தம் கற்பனைக்குத் தேவையான உண்மைகளைப் பெற்றவர் 'கல்கி'. மாமல்லபுரமும், அஜந்தாவும் அவரது கற்பனையை நீரூற்றி வளர்த்தன. தம் சொந்த மாவட்டமாகிய தஞ்சையைச் சார்ந்த ஒரு சிறு கிராமத்தில் 'அலை ஓசை' நாவலைத் தொடங்கும் 'கல்கி', நாவல் வளர வளரக் கராச்சி, திரிபுரா, லாகூர், டில்லி, கல்கத்தா, பானிபட், பம்பாய், பீஹார் என இந்திய நாட்டின் எல்லாப் பகுதிகளையும் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகிறார். பாரதத்தின் முழுப் பரிமாணமும் நாவலின் களமாக அமைந்து, 'அலை ஓசை'க்கு ஒரு தேசிய முக்கியத்துவத்தை அளித்து விடுவதைக் காணுகையில் தேசியவாதியான 'கல்கி'யின் ஈடுபாடு இந்நாவலிற் சென்றது மிகப் பொருத்தம் என்றே தோன்றுகிறது.

'அலை ஓசை' நாவலின் பல பாத்திரங்களைத் தம் சொந்த வார்ப்புக்களாகவே 'கல்கி' உருவாக்கியுள்ளார். புரட்சிக்காரனாக அரசியலில் ஈடுபட்டுக் காந்தியடிகளின் செல்வாக்கால் அஹிம்சையில் நம்பிக்கை கொள்ளும் சூரியா, இளமை முதல் நாட்டு விடுதலையில் ஊக்கம் கொண்ட தாரிணி, காந்தியைத் தெய்வமாய் எண்ணும் சீதா, மேலும் பட்டாபிராமன் — லலிதா அனைவரும் தேச விடுதலை ஆர்வம் கொண்டவர்களே. இவர்கள் அனைவரோடும் கல்கி தன்னை மறந்த லயிப்பில் — அத்வைத நிலையில் ஒன்றிக் கலந்து விடுகிறார். அவ்வாறு அவரே குறிப்பிடவும் செய்கிறார்:

''அலை ஓசையை நான் எழுதியதாகவே எண்ணக்கூடவில்லை. லலிதாவும், சீதாவும், தாரிணியும், சூரியாவும், சௌந்தரராகவனும், பட்டாபிராமனும் சேர்ந்து பேசிக் கொண்டு அவரவர்களுடைய அந்தரங்க ஆசாபாசங்களையும் உள்ளக் கிளர்ச்சியையும் வெளியிட்டு 'அலை ஓசை'யை எழுதியிருக்கிறார்கள். அவர்கள் கற்பனை செய்யப்பட்ட பாத்திரங்கள் என்றே என்னால் எண்ண முடியவில்லை.''

அந்நியரிடமிருந்து விடுதலை பெற்றாலும் உட்பூசல்களால் பாழ்பட்டு நிற்கும் பாரத தேசத்தின் அக விடுதலையினை இனிமேல்தான் சாதிக்க வேண்டும் என்ற செய்தியோடு நாவல் முற்றுப் பெறுகிறது. ஒரு தேச பக்தரியாகி வெளிப்படுத்தும் தாபக் குரலாகவே ஒலிக்கிறது. நாட்டு விடுதலைப் போராட்டத்தில் தீவிரமாகப் பங்கு பெற்று உழைத்த தமிழ் எழுத்தாளர்களில் முதலிடம் வகிப்பவர் அல்லவா 'கல்கி'.






### அத்தியாயம் 35

## கனோஜியின் தத்துவம்

அடவி மூலம் அரவம் செய்யாமல் வந்து அசுரச் சிரிப்புச் சிரித்து மயக்கம் போட்டுத் தொப்பென்று விழுந்த அந்த மனிதரின் உதவிக்கு மூவருமே விரைந்தார்கள். அவர் யாரென்பதில் அவர்கள் மூவருக்குமே சந்தேகமில்லாததால் அவர் விழுந்த இடத்தை அடைந்ததும் மூவருமே அவரைப் பிடித்து மூச்சைப் பிடித்துக் கொண்டு தூக்கினார்கள். ஸஹ்யாத்ரி பர்வதத்தின் இன்னொரு பகுதி போல் பர்வதாகாரமாக விழுந்து கிடந்த கனோஜி ஆங்கரேயைத் தூக்குவதோ உட்கார வைப்பதோ அவ்வளவு எளிய பணியில்லை என்றாலும், மூவரின் ஒன்றுபட்ட முயற்சி அதைச் சாத்தியமாக்கவே, அவரை மெள்ள உட்கார வைத்து பாஜிராவும் அனந்தும் பிடித்துக் கொள்ள, உள்ளே சென்று ஒரு குவளையில் நீர் கொண்டு வந்து அவர் முகத்தில் அடித்தான் சாரு. அதனால் கண்ணை விழித்த கனோஜி ஆங்கரே எழுந்திருக்க முயலவே ''ஸார்கேல்! வேண்டாம். அப்படியே இருங்கள்'' என்று கூறி பாஜிராவ் ஒரு கையையும் அனந்த் ஒரு கையையும் பற்றி அவரைத் தரதரவென்று இழுத்து வந்து குடிசையின் ஓலைச்சுவரில் சார்த்தி உட்கார வைத்தார்கள்.

அப்படி அநாகரிகமாகத் தம்மை இழுத்ததைப் பற்றி ஆட்சேபித்தார் கனோஜி ஆங்கரே. ''பேஷ்வா! அனந்த்! மகாராஷ்டிர ஸார்கேலை இப்படி இழுப்பது அவரை அவமதிப்பதாகும்'' என்று கூறினார், தமது ராட்சஸக் கண்களை உருட்டி இருவரையும் பார்த்து. மிகவும் உயர்ந்தும் பருத்துமிருந்த சரீரத்துடனும், ஒற்றைக் காதில் விலை உயர்ந்த பச்சைக் கல் பதித்த குண்டலத்துடனும் கடற் கொள்ளைக்காரர்களுக்கே ஓர் இலக்கணம் போல் விளங்கிய கனோஜி ஆங்கரே அன்று இடுப்பு வரையில் சராயும் மேலே மார்பை அரை குறையாக மறைத்த ஒரு பட்டுச் சட்டையை மட்டும் அணிந்திருந்ததால் அவர் கழுத்தில் கெட்டித் தங்க வீரச் சங்கிலியில் பதித்த நவரத்தினங்கள் சந்திர வெளிச்சத்தில் பிரமாதமாகப் பளிச்சிட்டன. ''ஸார்கேல்! இந்தச் சங்கிலி ஒன்றைக் கொண்டே மகாராஷ்டிரத்தை வாங்கலாமே! இதை எங்கே வாங்கினீர்கள்?'' என்று விசாரித்தார் பேஷ்வா.

பதிலுக்கு ஸார்கேல் இடியிடியென நகைத்தார். ''பேஷ்வா! உமக்குப் புத்தி சரியில்லை' என்றும் கூறினார் நகைப்பின் ஊடே.

''ஏன் ஸார்கேல்?'' என்று வினவினார் பேஷ்வா.

''கனோஜி எதையாவது வாங்கினதாகக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா பேஷ்வா? யாரி

டம் கைப்பற்றினுய், எந்தக் கப்பலிலிருந்து கொள்ளையடித்தாய் என்று கேட்டால் அர்த்த மிருக்கும் கேள்வியில். ''எங்கு வாங்கினுய்? ஆஹா! என்ன கேள்வி!'' என்று மீண்டும் நகைத்தார் ஸார்கேல்.

அவர் போதை இன்னும் முழுதும் தீர வில்லை என்பதைப் புரிந்து கொண்ட பேஷ்வா ''கனேஜி! நீங்கள் மகாராஷ்டிரஸார்கேல், கடற்படைத் தலைவர். கொள்ளைக்காரரல்ல'' என்று கடுமையுடன் சொன்னர்.

''அது உங்கள் தந்தையும், அந்த ஷாஹூ வும் கொடுத்த பெயர். வெள்ளைக்காரரைக் கேளுங்கள். வேறு பெயர் கொடுத்திருக் கிறார்கள். பைரேட், பைரேட்'' என்ருர் கனேஜி. இம்முறை நகைக்கவில்லை அவர். இகழ்ச்சிப் புன்முறுவல் மட்டும் கொண் டார்.

அவர் ஷாஹூ மன்னரை மகாராஜா என்று கூட அழைக்காமல் வெறும் ஷாஹூ என்று அழைத்ததைக் கண்ட அனந்த், அவரை பேஷ்வாவின் முன்னல் அதிகமாகப் பேச விடுவது தவறு என்பதைப் புரிந்து கொண்டதால் உரையாடலை வேறு மார்க் கத்தில் திருப்பி, ''ஸார்கேல்! இங்கு எதற்குத் தனியாக வந்தீர்கள்? அதுவும் உங்களுக்கு உடல்நிலை சரியாயில்லை......'' என்று தொடங்கினுன்.

பிரிட்டிஷாரும் போர்ச்சுகீஸியரும், மொகலாயரும் யார் பெயரைக் கேட்ட மாத் திரத்தில் நடுங்கினர்களோ, யாரால் பிரிட்டிஷ் கடலாதிக்கம் அரபிக் கடல் அழிக்கப்பட்டதோ அப்பேர்ப்பட்ட கனேஜி ஆங்கரே இந்திரஜித் அனந்தை நோக்கித் திரும்பித் தமது ராட்சஸ விழிகளை அவன் மீது நாட்டினர் ஒரு விநாடி. ''ஆம் அனந்த்! என் உடல் நிலை சரியாகத்தான் இல்லை. இல்லா விட்டால் இந்த மலையேறி வந்து நான் விழுந்திருக்க மாட்டேன். இதைவிடப் பெரிய மலை களை அநாயாசமாக ஏறி இருக்கிறேன்....'' என்று கூறினர்.

''ஸார்கேல்! நீங்கள் விழுந்தது உடல் நலக் குறைவால் அல்ல'' என் ருன் அனந்த்.

''வேறு எதனுல்?'' கனேஜி கேட்டார், கரகரத்த குரலில்.

''அதிகமாகக் குடித்து விட்டீர்கள்'' என் ருன் அனந்த்.

''இதைவிட இரண்டு மடங்கு குடித்த போதெல்லாம் விழுந்ததில்லை. வரவர இந்த உடல் அதிகக் குடியைத் தாங்கமாட் டேன் என்கிறது. கொஞ்சம் பலவீனத்தைக் காட்டுகிறது'' என்று அலுத்துக் கொண்ட கனேஜி, ''அனந்த்! வெள்ளைக்காரன் குதிரை விஸ்கியை நாலு குப்பி குடித்தாலும் கனேஜி திடமாக நிற்பான். இப்பொழுது மூன்ருவது குப்பியிலேயே வேகம் ஏறி விடுகிறது'' என்றும் வருத்தத்துடன் குடி குறைந்துவிட்டதை விளக்கினர்.

''அப்படியாஞல் பலவீனந்தான்'' என்று அனந்த் ஒப்புக் கொண்டான்.

''நீ எப்படி அனந்த்?'' கனேஜி ஆவ லுடன் கேட்டார்.

''நான் அதிகமாகக் குடிப்பதில்லை ஸார் கேல்.''

''குடிப்பதில்லையா?''

''இல்லை.''

''பூ! இத்தனைதானு நீ? உன் நண்பன்?''

''உங்களைப் போல் சில சமயங்களில் குடிக் கிறான். ஆனல் துளிக்கூட நிதானம் தப்புவ தில்லை.''



''பலே! துலாஜீ என் மகனல்லவா? வேறு எப்படி இருப்பான்?'' என்ற கனோஜி சிறிது சிந்தனையில் இறங்கினார். ''அது கிடக்கட்டும் அனந்த் அந்த சோடி (குட்டி) எப்படி இருப்பாள்? நல்ல அழகா?'' என்று வினவினார் அக்கறையுடன்.

அனந்தின் முகத்தில் சிறிது கோபம் துளித்தது. ''எப்படி இருந்தால் உங்களுக்கென்ன?'' என்று வினவினான்.

பதிலுக்கு இடியிடியெனநகைத்த கனோஜி ''அனந்த்! நீ யோக்கியன் என்று நினைத்தேன். நீயும் என்னைப் போலத்தான்'' என்றார்.

''என்ன உங்களைப் போல்?'' சீற்றத்துடன் வந்தது அனந்த் கேள்வி.

''ஒன்றுக்கு இரண்டாகப் பிடித்திருக்கிறாய். இந்தச் சாரு ஒன்று அந்த ரத்னா ஒன்று'' என்று கூறி மீண்டும் நகைத்தார் கனோஜி.

அவர் சொற்களைக் கேட்ட அனந்த் திகைப்படைந்தான். ''அவள் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று வினவினான் திகைப்பின் சாயை குரலிலும் படிய.

''யாராவது அழகி என்று பெயரெடுத்தால் அவர்கள் ஜாதகத்தைக் கணிப்பதைத் தவிர வேறு வேலை கனோஜிக்கு? கனோஜி லவ்ஸ் த ஸீ, த ஷிப், த டன். யூ நோ ஹோராய்'' என்று ஆங்கிலத்திலும் இறங்கினார்.

''ஹோராய்?'' எரிச்சலுடன் கேட்டான் அனந்த்.

''மூன்றும் ஒரே விதம்.''

''த ஸீ ஈஸ்
டேஞ்ஜரஸ்
பட் ஈஸ்ட்ச்



டு எ குட் ஸெய்லர் (சமுத்திரம் அபாய மானது. ஆனால் நல்ல மாலுமியிடம் அடங்குகிறது.) த ஷிப் ஈஸ் ப்யூடிபுல் பட் கான் பி நாவிகேடட் ஒன்லி பை ஆன் எக்ஸலண்ட் காப்டன் (கப்பல் அழகு வாய்ந்தது. ஆனால் அதை ஒரு நல்ல தலைவன்தான் இயக்க முடியும்), எ உமன் ஈஸ் போத் ப்யூடிபுல் அண்ட் டேன்ஜரஸ், ஒன்லி எ ஸ்ட்ராங் மான் கான் கண்ட்ரோல் ஹர் (ஸ்திரீ அழகும் ஆபத்தும் கலந்தவள். சக்தி வாய்ந்த ஆடவன்தான் தன் இஷ்டத்துக்கு அவளை வளைக்க முடியும்)'' என்ற கனோஜி ''நீ அந்தக் கடல் ராணியை வளைத்து விட்டாயா இல்லையா?'' என்றும் வினவினார்.

அவர் பெண்ணைப் பற்றியும் குடியைப் பற்றியுமே பேசியதைப் பொறுக்காத சாரு உள்ளே செல்ல எழுந்திருந்தாள். அவளைக் கையைப் பிடித்துப் பலவந்தமாக உட்கார வைத்தார் கனோஜி. ''சாரு! நீ அழகான பெண். தைரியசாலி. உன்னை அடைந்துள்ள இந்த அனந்த் அதிர்ஷ்டசாலி'' என்றார்.

''என்னை யாரும் அடையவில்லை. அடைய முடியாது. ஸார்கேல்! உங்கள் நாவை நீங்கள் அடக்காவிட்டால் உங்களை இங்கிருந்து மலைச் சரிவில் உருட்டி விடுவேன்'' என்று கடுங் கோபத்துடன் சொற்களைக் கொட்டினாள் சாரு.

''சாரு! ஸார்கேலை உனக்குத் தெரியாதா? அவர் நோய்வாய்ப்பட்டிருக்கிறார். சுய புத்தியில் பேசவில்லை'' என்றார் பேஷ்வா.

இதைக் கேட்ட கனோஜி நகைத்தார் மீண்டும். ''பேஷ்வா! சுயபுத்தி உமக்குத்தான் இல்லை. நான் அனுப்பிய மதுவைக் குடித்திருக்கிறீர்'' என்று கூறினார்.

சாரு வியப்புடன் நோக்கினாள் கனோஜியை. ''நீங்கள் அனுப்பிய மதுவா!'' என்றும் கேட்டாள்.

''வேறு யாருக்குத் தெரியும் பேஷ்வா தன்னந் தனியாக வருவது?'' என்று வினவினார் கனோஜி.

''அப்படியானால் மதுக் குப்பி...?'' என்றாள் சாரு.

## மரவீடு!

கிழக்கு பொலிவியாவிலுள்ள தொலிபரோக்கள் என்ற சிறோச ஜாதியினர் கல் அல்லது மண்ணில் கட்டிய வீடுகளில் வசிப்பதில்லை. அவர்களது தேசத்தில் போத்தல் மரம் இருக்கிறது. அவர்கள் அந்த மரத்தைக் குடைந்து அதிலே வசிக்கிறார்கள். மரத்தைக்குடைவதினால் அதற்கு ஒரு சேதமும் ஏற்படுவதில்லை.

அ. ராமச்சந்திரன்



'பேஷ்வா வரும் நாள் பார்த்துக் குடிசை வாசலுக்கு ஆகாசத்திலிருந்தா குதிக்கும்?'' என்று கேட்டார் கனோஜி.

பேஷ்வா பாஜிராவ் உண்மையைப் புரிந்து கொண்டார். அது அத்தனை வியப்பாகவும் இல்லை அவருக்கு. பூரணமாகக் குடித்த நிலையிலும் கனோஜியின் கண்களிலிருந்து எதுவும் தப்புவதில்லை என்றும் அப்படியிருக்க மலை மீது திடீரென்று தோன்றிய குடிசை மீது ஒரு கண்ணை அவர் வைத்திருந்ததில் ஆச்சரியம் இல்லை என்பதையும் உணர்ந்து கொண்டார். தன்னந் தனியே இருந்த சாருபாயிடம் விஜயதுர்க்க வாலிபர்கள் அதிகமாகச் சேஷ்டை செய்யாததற்குத் தம் வருகையைத் தவிர கனோஜியின் சிரத்தையும் காரணமாக இருக்க வேண்டுமென்பதும் தெளிவாகத் தெரிந்தது பாஜிராவுக்கு. ஆகவே பாஜிராவ் கேட்டார்: ''நான் இத்தனை நாள் இங்கு வந்து போவதை அறிந்த நீங்கள் என்னை ஏன் வந்து இன்று வரை காணவில்லை?'' என்று.

''தேவையில்லை, காணவில்லை'' என்றார் கனோஜி.

''இப்பொழுது தேவை யிருக்கிறதா?'' பாஜிராவ் கேட்டார், சந்தேகம் ஒலித்த குரலில்.

''ஆம்.''

'என்ன தேவை?''

''நாளைக்கு என் மாளிகையில் விருந்துண்ண வரும்போது தெரிந்து கொள்வீர்கள்.''

''நான் விருந்துண்ண வருவேன் என்பது என்ன நிச்சயம்?''

''அதில் அனுகூலம் இருக்கிறது. அனுகூலத்தை பாஜிராவ் புறக்கணித்ததாகக் கேள்வியில்லை.''

''என்ன அனுகூலம்? பெண்ணா?'' என்று எரிச்சலுடன் கேட்டார் பேஷ்வா.

''இல்லை'' என்றார் கனோஜி.

''மதுவா?''

''இல்லை. அதை வழக்கம்போல் நான் அனுப்பியிருப்பேன்.''

''வேறென்ன?''

''இப்பொழுது சொல்ல முடியாது திட்டமாக.''

''ஏன்?''

''நீங்கள் சந்திக்கவிருக்கும் மனிதன் என் வலையில் விழுகிறான் என்பது சந்தேகம்.''

''மனிதனா?'' என்றார் பேஷ்வா வியப்புடன்.

''ஆம். தம்மைப் போல் ஓர் ஆண்மகன்.''

''பெயர்?''

''நாளை நீங்களே தெரிந்து கொள்ளலாம்.''

இதைக் கேட்ட பேஷ்வா சிந்தனை வசப்பட்டார். ''இங்கு நான் வந்து போவது மிகுந்த ரகசியம். உங்களுக்குத் தெரிந்தால் பாதகமில்லை. ஆனால் விஜய துர்க்க விஜயம் பகிரங்கமாக நடக்க முடியாது. அதற்கு முன்பாக அரசாங்க ஏற்பாடுகள், விஜயத்துக்கான முறைகள் உண்டு'' என்று விளக்கினார் பேஷ்வா.

''அந்த விஷயங்களை நான் கவனித்து விட்டேன்'' என்றார் ஸார்கேல்.

''எப்படி?''

''பேஷ்வா முக்கிய அரசாங்க அலுவலக அந்தரங்கமாகப் பேச வருவதாக நானே அறிவித்து விட்டேன். உங்களுக்காகத் தனி இடம் எனது மாளிகையில் ஒழித்து விடப்பட்டிருக்கிறது. நீங்கள் வரும்போது எந்த வரவேற்போ வாத்திய கோஷமோ கூடாதென்று உத்தரவிட்டிருக்கிறேன். நானே இரவு விளக்கு வைத்ததும் உங்கள் மூவரையும் அழைத்து வர எனது மாலுமிகள் இருவர் வருவார்கள்'' என்று அறிவித்த கனோஜி எழுந்தார் திரும்பிச் செல்ல.

''ஸார்கேல்! நான் கூட வரட்டுமா?'' என்று கேட்டான் அனந்த்.

''யாரும் தேவை யில்லை. இப்பொழுது தெளிந்து விட்டது'' என்று கூறிவிட்டுக் கனோஜி சற்றுத் திடமாகவே மலைச் சரிவில் இறங்கி அடவிக்குள் மறைந்து விட்டார்.

திடகாத்திரமான அவரது சரீரம் அவர் எத்தனையோ சமாளித்தும் கூட சற்றுத் தடுமாற்றம் கொடுப்பதைக் கவனித்த மூவர் முகத்திலும் சிறிது துன்பச் சாயை படர்ந்தது. ''கடலை ஆட்டிப் படைத்தவர், மகாராஷ்டிரத்தின் கடல் காவலர், ஏன் இப்படித் தள்ளாடிவிட்டார்?'' என்று பாஜிராவ் வருத்தத்துடன் கூறினார்.

அனந்தும் சாருவும் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் மூவரும் மௌனமாகவே இருந்தனர். ''இன்னும் ஒரு நாள் தங்க வேண்டும். நாளைக் காலையில் போய்விடலாமென்று வந்தேன்'' என்று பாஜிராவ் அலுப்புடன் கூறினார்.

''ஸார்கேல் விஷயமில்லாமல் நம்மை அழைக்க மாட்டார்'' என்று கூறினான் அனந்த்.

அத்துடன் சாருவை உள்ளே உறங்கச் சொல்லிவிட்டு மற்ற இருவரும் வெளியிலேயே படுத்துக் கொண்டார்கள். ''பேஷ்வா! மஞ்சத்தில் படுத்த நீங்கள் தரையில் படுக்க வேண்டி யிருக்கிறதே'' என்று அனந்த் வருத்தத்துடன் கூறினான்.

''மகாராஷ்டிரத்தின் மண் தரையை விட மஞ்சத்தின் சுகம் அதிகமா?'' என்று கேட்டார் பேஷ்வா. அதைச் சொல்லி நன்றாகப் புரண்டு படுத்தார்.

மறுநாள் பகல் ஓடியது. இரவு நெருங்கியதும் இரு மாலுமிகள் வந்தனர். மூவரையும் விஜய துர்க்கத்துக்கு அடவியின் மூலமே அழைத்துச் சென்றனர். யார் கண்ணிலும் படாமல் அழைத்து வரப்பட்ட அம்மூவரையும் கனோஜி மாளிகை வாசலிலேயே சந்தித்து விருந்து மண்டபத்துக்கு அழைத்துச் சென்றார்.

விருந்து மண்டபத்தின் முகப்பு அறையில் அமர்ந்திருந்த ஒரு மனிதர் எழுந்திருந்தார். வந்தவர்களைக் கண்டதும். அவரை அறிமுகப்படுத்தினார் கனோஜி. ''பேஷ்வா! அனந்த்! சாரு! எனது அந்தரங்க நண்பரைச் சந்தியுங்கள், ஹி ஈஸ் ஆன் இங்கிலீஷ்மன், பட் எ வெரி பைன் ஜென்டில்மன்'' (இவர் ஆங்கிலேயர்தான். இருப்பினும் மிக்கக் கண்யமானவர்) என்று கூறிவிட்டு அவர் பெயரையும் நிதானமாக உச்சரித்தார். அந்தப் பெயரைக் கேட்டதும் மித மிஞ்சிய ஆச்சரியமடைந்தான் அனந்த். அவன் வாயிலிருந்து சொற்கள் வரவில்லை. பேஷ்வாவின் கண்களில் சீற்றம் மெல்ல உதயமாயிற்று. (தொடரும்)

வழுக்கி விழுந்தவளுக்கு வாழ்வளிப்பது - சிரஞ்சீவிப் பிரச்னை

எம். ஏ. காஜா, 'அவசரக் கோலம் அள்ளித் தெளி' என்பதுபோல் இப்பிரச்னைக்குத் தம் திரைக் கதையில் தீர்வுகாண' முயன்றிருக்கிறார். பிரச்னை அவர் பிடிக்கு அகப்படாமல் வழுக்கிக்கொண்டு போய்விட்டது! படத்தின் டைரக்டரும் அவர்தான்.

தபால் காரரே முன் வந்து நெறி தவறியவளைக் கரம் பற்றியிருந்தால், திரைக் கதையில் ஒரு திருப்பம் ஏற்பட்டிருக்கும், அப்படியில்லையே! தபால் காரரின் காதலி, குடும்ப அந்தஸ்தின் காரணமாக ஒரு பணக்கார வாலிபனை மணக்கிறாள். தபால் காரரை அண்ணனாக ஏற்கிறாள்! (அண்ணன் தங்கை உறவு நம் தமிழ்ச் சினிமாவில் படும்பாடு... ஐயகோ! இழிவு! இழிவு!)

தன் கல்யாணம் முடிந்ததும், காதலி தன் நிழல் அண்ணனுக்கு வழுக்கி விழுந்தவளை மணம் முடித்து வைத்துவிட்டால் தேவலையே! ஒரு சீர்திருத்தச் சொற்பொழிவு, கனல் கக்கும் வாசகங்களில் பொழிந்துவிட்டு மணம் முடித்து வைக்கிறாள்! அவர்தான் ஹீரோயின் தீபா!

இப்படத்தில், பாராட்டுக்குரியவர் ஸ்வர்ணா! அற்புதமாக நடித்திருக்கிறார். சவுக்கடிகளாக விழும் அவரது உரையாடல்கள் உயிருள்ளவை! வாழ்வா, ஸ்வர்ணா!

தெருவிளக்கு - வெளிச்சம் தரவில்லை. —காந்தன்



ரேஸ் குதிரை மாதிரி, கோவை எக்ஸ்பிரஸ் கோவைக்குப் பாய்ந்து கொண்டிருந்தது.

உள்ளே சுகப்பிரம்மம் அலுத்துக் கொண்டார்.

'எத்தனை நாழிதான் ஒரே மாதிரி உட்கார்ந்து கொள்கிறது? தாராளமாய்க் கையைக் காலை நீட்டிக்கொள்ள முடியாமல்...: பகல்லே ரயில் பிரயாணமே அவஸ்தைதான்.'

எரிச்சலுடன் ஜன்னலுக்கு வெளியே பார்த்தார். வெளிக்காட்சிகள், அசுவாரஸ்யமாக இருந்ததால் ரயிலுக்குள் தம் பார்வையை ஓட விட்டார்.

எதிர்வரிசையில் ஒரு பெரியவர் — உச்சந் தலைவரை பெரிய நாமத்தைப் போட்டுக் கொண்டிருந்தவர் — தூங்க முயன்று கொண்டிருந்தார். கனத்த மூக்குக் கண்ணாடிக்குள் கண்கள் பூதம் காட்டின.

இவரைப் பார்த்ததும் பெரியவர், ''இப்பப் போனது என்ன ஸ்டேஷன்?'' என்று கேட்டார் கட்டைக் குரலில்.

''கவனிக்கல்லியே...'' என்ற சுகப்பிரம்மம், ''எங்கே கோயம்புத்தூர் வரைக்குமா?'' என்று விசாரித்தார்.

''ஆமா...''

இடது காலைத் தொங்க விட்டுக் கொண்டிருந்தவர், வலது காலைத் தொங்கவிட்டு இடதுகாலை மடித்துக் கொண்டார்.

''என்னதான் சொல்லுங்க, ராத்திரியிலே பிரயாணம் பண்றது தான் சௌகர்யம். ஏதோ ஒக்காந்தமா, தூங்ினமான்னு இருக்கும். பகல் பிரயாணம் போர்....''

''ரொம்ப கரெக்ட்.... சீட்டாவது கொஞ்சம் குஷனா இருந்தா சமாளிக்கலாம். வெறும் பலகைதான். தொடை, முதுகெல்லாம் வலிக்கிறது....''

எதிர் சீட்டுக்குக் கீழே தாராளமாய்க் காலை நீட்டிக் கொண்டார் சுகப்பிரம்மம்.

நீலச் சொக்காய் போட்டுக் கொண்டிருந்த கான்டீன் ஊழியன் கையில் ஒரு டிரேயில் ''ஸோமாஸ்... காரா ஸோமாஸ்' என்று ஒரு வித்தியாசமான ராகத்தில் கூவிக் கொண்டே போனான். அதைத் தொடர்ந்து ''காப்பீ...காப்பீ...'' என்று பெரிய எவர்சில்வர் டிரம்மைத் தூக்கிக் கொண்டு இன்னொரு நீலச் சொக்காய் போனான்.




நாமக்காரர் காப்பி வாங்கிச் சாப்பிட்டார்.

சுகப்பிரம்மத்தின் வலதுபுறம் உட்கார்ந்திருந்தவர் — கையில் ரீடர்ஸ் டைஜஸ்டைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தவர் — சோம்பல் முறிப்பதற்காகக் கைகளை விரிக்கவும் சுகப்பிரம்மத்தின் தோளில் இடித்து விடப் பரபரப்புடன், ''சாரி, வெரி சாரி'' என்று மன்னிப்புக் கேட்டார்.

''வாட் ஈஸ் தேர்?... பரவாயில்லே.: எங்கே கோயம்புத்தூர் வரைக்குமா?...''

''யெஸ்... இன்னிக்குச் சாயங்காலம் அங்கே ஒரு லெக்சர் கொடுக்கப் போறேன்..''

''எங்கேயோ?''

''யோகா சென்டர்லே... 'யோகா அண்ட் மாடர்ன் தாட்'னு சப்ஜெக்ட்.... முடிஞ்சா வாங்களேன்...'' என்றவர் ''அர்ஜன்டா கௌம்ப வேண்டியிருந்தது. அது தான் இதுலே வந்தேன்... பொதுவா டே ஜர்னியை அவாய்ட் பண்றது என் வழக்கம். டையமும் வேஸ்ட் ... போரடிக்கும்...''

சின்னக் கொட்டாவி அவர் வாயிலிருந்து உதிர்ந்தது.

''எக்ஸாக்ட்லீ! ... பகல்லே ஒரு மணி நேரம் ஒக்காந்து போறது டயர்சம்! ....காலை நீட்டிக்கிட்டு ஒக்காந்தாலும் வலிக்குது. மடிச்சுக்கிட்டு ஒக்காந்தம்னாலும் வலிக்குது ... சாஞ்சு ஒக்காந்தா முதுகுவலி... சாயாட்டா இடுப்பைப்புடுச்சுக்குது.. பெரிய போருங்க.''

யோகாக்காரரை அடுத்து உட்கார்ந்திருந்த பச்சைச் சட்டைக்காரர் பலமாய் ஆமோதித்தார். அவரது நீண்ட கொட்டாவி, அவரது கூற்றை வழிமொழிந்தது.

''வடை ... சூடா பஜ்ஜீ...''

''பஜ்ஜீ ஒரு ப்ளேட் குடுப்பா...''

பச்சைச் சட்டைக்காரர் காகிதப் பிளேட்டில் வாங்கிக் கொண்டார். அதன் வாசனை இதமாய் இருந்தது.

நாமக்காரருக்கு அடுத்து உட்கார்ந்திருந்த ஒரு நடு வயதுக்காரர் தட்டுத் தடுமாறிக் கொண்டு எழுந்து டாய்லெட்டுக்குப் போனார். ஈரக் கையைத் துடைத்துக் கொண்டே மறுபடியும் வந்து அவர் அமர்ந்து கொண்டார்.

''உங்களைக் கோயம்புத்தூர்லே பாத்திருக்கேன் போலிருக்கே'', நாமக்காரர்தான் கேட்டார்.

''நான் கோயம்புத்தூர் காலேஜ்லேதான் புரொஃபஸராய் இருக்கேன், மெட்ராஸ்லே எங்கப்பாவுக்கு உடம்பு சீரியஸ்னு தகவல் வந்தது. பாத்துட்டு வரேன்.''

''தேவலையா அவருக்கு?''

''எண்பத்தஞ்சு வயசாறது... என்னத்தைச் சொல்றது?....''

ஆசுவாசப்படுத்திக் கொள்கிற மாதிரி, ரயில் சில நிமிடங்கள் காட்பாடியில் நின்றது. ரயில்வே ஸ்டேஷன் கடிகாரம் மணி ஏழே முக்காலைக் காட்டியது. ஸ்டேஷன் கலகலப்பு சற்று இதமாக இருந்தது. ரயிலை விட்டு இறங்கி எதிர்த்தாற்போல் இருந்த வெற்றிலை பாக்குக் கடையில் பாக்குப் பொட்டலம் வாங்கிக் கொண்டு வந்தார் சுகப்பிரம்மம்.



திரும்பி வந்தபோது அவர் இடத்தில் ஒரு சின்னப் பையன் — ஏழெட்டு வயசு இருக்கலாம் — உட்கார்ந்திருந்தான். எதிரில் இருந்த காலி இடத்தில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள்.

இவர் வருவதைப் பார்த்ததும், ''டேய், ராஜு! இங்கே வா... அந்தத் தாத்தாவுக்கு இடம் கொடுத்துவிட்டு இங்கே வா'' என்று அவனைத் தன்னை நோக்கி இழுக்க முயன்றாள்.

''மாட்டேன் போ... ஜன்னல் கிட்டே தான் உட்காருவேன்...''

பிடிவாதமாய்ப் பையன் மறுக்கவும் அந்தப் பெண் அவனைப் பிடித்து இழுக்கவும் ஒரு சிறு போராட்டத்துக்குச் சுகப்பிரம்மம் முற்றுப்புள்ளி வைத்தார்.

''பரவாயில்லே... இருக்கட்டும்.... நான் இந்தப் பக்கமாய் உக்கார்ந்துக்கறேன்'' என்றவர் மறுபக்கம் வந்து அமர்ந்து கொண்டார்.

அழகான சுருட்டை முடியுடன் துறுதுறு வென்றிருந்தான் பையன். சர்வ உற்சாகத்துடன் ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்தான்.

''அம்மா...அம்மா... அதோ பாரும்மா ரெண்டு காக்கா டுயட் பாடறது...''

சுகப்பிரம்மம் அவசரம் அவசரமாய்க் குனிந்து வெளியே பார்த்தார்.

தந்திக் கம்பியில் இரண்டு காகங்கள் ஒன்றன் மூக்கை இன்னொன்று கொத்திக்கொண்டிருந்தன.

''போடா.... அசடு'' என்ற அந்தப் பெண்ணின் முகம் இலேசாய்ச் சிவந்ததைக் கவனித்தார் சுகப்பிரம்மம்.

''அம்மா... அம்மா.... அந்தப் பனை மரத்தைப் பார்த்தா ஒட்டடைக் கம்பு மாதிரியே இல்லே?....''

மறுபடியும் அம்மாவின் முகத்தைத் திருப்பிக் காண்பித்தான்.

ஜன்னல் வழியே வெளியே தெரிந்த வயலில் சில பெண்கள் நாற்று நட்டுக் கொண்டிருந்தார்கள்.

''அந்தப் பொம்மனாட்டிகளெல்லாம் என்ன பண்றா?''

''நாத்து நடறா'' என்று சுகப்பிரம்மம் பதில் சொன்னார்.

அவரை ஒரு கணம் உற்றுப் பார்த்தான்.

''நாத்துன்னா என்ன?'' என்றான்.

சுகப்பிரம்மம் மிக உற்சாகத்துடன் நெற்பயிரைப் பற்றி யெல்லாம் சொன்னார். நாற்று பயிராகி, பயிர் எப்படிக் கதிர் விட்டு, கதிரை எப்படி அறுத்து, எப்படி அரிசி கிடைக்கிறது என்றெல்லாம் விளக்கிச் சொன்னார்.

பையன் கவனமாகக் கேட்டான்.

''இவ்வளவு 'கஷ்டப் படுவானேன்?... பேசாமெ எங்க நாடார் கடையிலேயே அரிசி

நெறைய இருக்கு. இல்லேம்மா?'' என்று அந்தப் பையன் சொல்லவும் நாமக்காரர் பெரிதாய்ச் சிரித்தார்.

அவர் சிரிப்பதைப் பார்த்த பச்சைச் சட்டைக்காரர், 'என்ன' என்று கேட்க நாமக்காரர் பதில் சொல்ல, சிரிப்பு அலையாய்ப் பரவியது.

அரைத் தூக்கத்திலிருந்த புரொபஸர், புன்முறுவலுடன் அந்தச் சிறுவனைப் பார்த்தார்.

''பையன் நல்ல போடு போட்டான். எந்தக் கிளாஸ் படிக்கிறான்?'' என்றார் யோகாக்காரர்.

''மூணாவது'' என்றாள் தாயார் கூச்சத்துடன்.

நேரம் விரைந்து ஓடியது.

''அம்மா நான் ஒரு ரிடில் போடறேன்... நீ சொல்றியா?'' என்றான் பையன். தாயார் தலையசைத்தாள்.



அவர்: ஒரு லட்சாதிபதியை விட பத்து பெண்களைப் பெற்ற ஒருவன் சந்தோஷமாய் இருப்பான்னு நினைக்கிறேன்...

இவர்: ஏன் அப்படி சொல்றே...?

அவர்: 'போதும்'ங்கிற மனநிலை அவனுக்கு வந்திருக்குமே...''

- ராஜேஸ்வரி

''உலகம் பூரா ஒரே லைட்.... அது என்ன?''

''சூரியன்'' என்றார் சுகப்பிரம்மம்.

''தப்பு.''

''சந்திரன்'' என்றார் நாமக்காரர்.

''கரெக்ட்.''

''சூரியனும் லைட்தானே, அது ஏன் தப்பு?'' என்றார் புரொபஸர்.

''லைட் ராத்திரிக்குத்தானே மாமா'' என்று சிறுவன் பளிச்சென்று பதில் சொல்லவும் பெரிதாய்ச் சிரித்தார் யோகாக்காரர்.

''பையன் பெரிய ஆளா யிருப்பான் போலேயிருக்கே'' என்றார் பச்சைச் சட்டைக்காரர். சுகப்பிரம்மம் ஆமோதித்தார்.

''சரி.... இன்னொன்று.... கமலஹாசனும் ஸ்ரீதேவியும் சேர்ந்து நடிச்ச மொதல் படம் என்ன?''

''பதினாறு வயதினிலே'' என்றார் நாமக்காரர்.

''தப்பு''. சிறுவன் முகத்தில் உற்சாகம் கரை புரண்டது.

''சிவப்பு ரோஜாக்கள்'' என்றார் புரொபசர்.

''ஊஹூம்....''

சுகப்பிரம்மம் தாம் பார்த்த படங்களையெல்லாம் நினைவுபடுத்திக் கொண்டார். ''நினைத்தாலே இனிக்கும்'' என்றார் பரபரப்பாக.

''அய்யோ...., அய்யோ.... தப்பு...,தப்பு அதுலே ஸ்ரீதேவி நடிக்கலே இல்லே....'' பையன் முகத்தில் உற்சாகம் கொப்பளித்தது.

''பின்னே அதுலே நடிச்சது யாரு?... டி.வி.லே காமிச்சாளே?''

''ஜெயமாலினியோ?'' என்றார் நாமக்காரர்.

''ஊஹூம்... அது ஜெயப்பிரபான்னு நெனைக்கிறேன்'' என்று யோகாக்காரர் கூறவும் பச்சைச் சட்டைக்காரர் பலமாகத் தலையாட்டினார்.

''தெரியல்லியே.... நீதான் சொல்லேன்'' என்று புரொபசர் தம் தோல்வியை ஒப்புக் கொள்ளவும் பையன் பளிச்சென்று ஒரு படத்தின் பெயரைச் சொன்னான்.

''ஆமாமா... கரெக்ட், கரெக்ட்'' என்று ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்தான் தேங்காய் போளி விற்றுக் கொண்டிருந்த நீலச் சட்டை ஊழியன். வியாபாரத்தை மறந்துவிட்டு வெகு நேரமாய் அங்கேயே நின்று கொண்டிருந்தான் அவன்.

''சரி.... நான் ஒரு ரிடில் போடறேன். நீ சொல்லு'' என்றவண்ணம் யோகாக்காரர் ஆரம்பித்தார்.

''காலில்லாமலே ஓடும். அது என்ன?''

சிறுவன் யோசித்துவிட்டு, ''பாம்பு'' என்றான்.

''இல்லே'' என்று தலையசைத்தார் யோகாக்காரர்.

''பந்து.''

''ஊஹூம்....''

இன்னும் ஏதேதோ பெயர்களைச் சொன்னான். எல்லாவற்றையும் மறுத்தார் யோகாக்காரர்.

''நீங்கதான் சொல்லுங்கோ.''

''கடிகாரம்.''

''அது தப்பு. அதுக்குத்தான் ரெண்டு கையிருக்கே?''

''நான் காலுன்னுதானே சொன்னேன்.''

''காலென்ன கையென்ன?... பாம்புக்கு ரெண்டும் இல்லியே? அதுதானே ரொம்பக் கரெக்ட்.... இல்லேம்மா?'' என்று பையன் தாயாரைத் துணைக்கு அழைத்தான்.

நாமக்காரர் பையனை ஆதரித்தார்.

பச்சைச் சட்டைக்காரருக்கு உற்சாகம் கிளம்பியது.

''நான் ஒரு கேள்வி கேட்பேன் பதில் சொல்றியா?''

பையன் பெரிதாகத் தலையாட்டினான்.

''மயிலாப்பூருக்கும் தி. நகருக்கும் சண்டை வந்தா மயிலாப்பூர்தான் ஜெயிக்கும். எப்படிச் சொல்லு பார்ப்போம்?''

நாமக்காரரும் புரொபசரும் கேள்வியை ஜீரணிப்பதற்குள்ளேயே பளிச்சென்று பதில் சொன்னான்.

''மயிலாப்பூர்தான். என்ன அங்கேதானே டாங்க் இருக்கு?... ரொம்பப் பழைய அறுவை ஜோக் மாமா, இது!''

பச்சைச் சட்டைக்காரர் அசடு வழிவதைப் பார்த்து எல்லோரும் 'கொல்'லென்று சிரித்தனர். அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் எல்லோரும் கூட மிகச் சுவாரசியத்துடன் கவனிக்கலானார்கள்.

ரயில் சிறிக்கொண்டு பாய்ந்தது. 'தடார் தடார்' என்று சில ஸ்டேஷன்கள் கண வேகமாய் மறைந்தன.

நாமக்காரர் தாமும் ஏதாவது கேள்வி கேட்போமே என்று தொண்டையைக் கனைத்துக்கொண்டு ஆரம்பித்தார்.

''கவனமாகக் கேளு... ரெண்டாந் தரம் சொல்ல மாட்டேன். ஒரு எலெக்ட்ரிக் ட்ரெயின் கிழக்கே யிருந்து மேற்கே போறது. அப்போ புகை....'' என்று அவர் முடிப்பதற்குள் விருட்டென்றுஇடைமறித்தான் சிறுவன்.

''புகை எந்தப் பக்கம் போகும்னுதானே கேட்கப் போறேன்?... எலெக்ட்ரிக் ரயிலுக்கு ஏது மாமா புகை?''

நாமக்காரர் உடம்பு குலுங்கச் சிரித்தார். அந்தப் பகுதி முழுவதும் சிரிப்பு அடங்க வெகு நேரம் ஆயிற்று.

''பையன் பெரிய ஆள்'' என்றார் யோகாக்காரர்.

''படு ஸ்மார்ட்'' என்றார் புரொபசர்.

பெருமை பொங்கி வழியப் பார்த்துக் கொண்டிருந்தாள் அந்தப் பெண்.

ஆளுக்கொன்றாய் ஏதோ கேட்க, சளைக்காமல் பதில் சொன்னான். ஒவ்வொரு பதிலும் சிரிப்பலைகளைக் கிளப்பியது. அந்தக் கம்பார்ட்மெண்ட் முழுதும் உற்சாகம் குமிழி விட்டது. தூங்கிக் கொண்டிருந்த சிலர் கூடத் தூக்கம் கலைந்து சுவாரசியத்துடன் வேடிக்கை பார்க்கலாயினர்.

பையன் கிரிக்கெட்டில் கபில்தேவைப் பிடிக்கும் என்றான். ரஜனிகாந்த் ஸ்டைல் பிரமாதம் என்றான். ப்ரூஸ் லீ கராத்தே சினிமாப் பார்த்ததாகச் சொன்னான். இன்னும் என்னவெல்லாமோ சொல்லிக் கொண்டே இருந்தான்.

நேரம் யாரோ துரத்துகிற மாதிரி பிய்த்துக்கொண்டு ஓடிற்று.

ரயில் நின்றது.

வெளியே எட்டிப் பார்த்தார் சுகப்பிரம்மம்.

திருப்பூர் ஸ்டேஷன். இடது கையை மலர்த்தி மணியைப் பார்த்தார். பன்னிரண்டு.

'கன் டைம் கீப் பண்றான். இன்னும் ஒரு மணி நேரம்தான்' என்று எண்ணுகிறபோதே உற்சாகமாய் இருந்தது அவருக்கு.

கீழே இறங்கி ஒரு பாக்குப் பொட்டலம் வாங்கப் போனார்.

ஓர் உறுமலுடன் வண்டி கிளம்பியது.

ஓட்டமாய் ஓடிவந்து தொற்றிக் கொண்டார் சுகப்பிரம்மம். தன் இடம் வந்து பார்த்தபோது அந்தப்பையன் தன் தாயார் மடியில் படுத்துக்கொண்டு தூங்கிப் போயிருந்தான். இடதுகைக் கட்டை விரலைச் சப்பிக் கொண்டிருந்தான்.



நண்பர்: ஆமாம்! நீர் எழுதிய மட்டமான ஜோக்குகளைக் கூட அந்தப் பத்திரிகை பிரசுரம் செய்கிறதே எப்படி?

மற்றவர்: அந்த வயிற்றெரிச்சலை ஏன் கிளப்புகிறீர்? அந்தப் பத்திரிகை ஆசிரியருக்கு நான் ரூ. 100/- கடன் பாக்கி. அதை ஜோக்குகளின் சன்மானத்திலிருந்து கழித்துக் கொள்கிறார்!

—ராஜுகோபாலன்

---

''என்ன, அதுக்குள்ளே தூங்கிட்டான் போலேயிருக்கே?.. கெட்டிக்காரக் குழந்தை'' என்று சிலாகித்த வண்ணம் தம் இடத்தில் அமர்ந்து கொண்டார்.

''எப்பவுமே இப்படித்தான்... பேசிண்டே இருப்பான். நிமிஷமாத் தூங்கிப் போவான்'' என்று சொல்லிக் கொண்டே அவன் தலையைக் கோதி விட்டாள் அவன் தாயார்.

இதழ் விரித்துச் சிரித்த தாமரை மலர் ஒன்று இதழ் கூம்பி மறுபடியும் மொட்டாகி விட்டது மாதிரி, அழகாய், மிக அழகாய்த் தூங்கிக் கொண்டிருந்தான் சிறுவன்.

நேரம் வளர்ந்தது. சட்டென்று அந்த இடத்தில் மிகக் கனமான அமைதி அழுத்தத் தொடங்கியது.

காலை நீட்டிக் கொண்டிருந்த சுகப்பிரம்மம் சிரமமாக இருக்கவே, மறுபடியும் காலை மடித்துக் கொண்டு உட்கார்ந்து பார்த்தார். அதுவும் அசௌகரியமாய் இருந்தது. 'த்சு' என்று அலுத்துக் கொண்டார்.

ஆங்கில நாவலைப் பிரித்துப் படிக்க முயன்றார் புரொபசர். சற்று நேரத்தில் அலுக்க ஆரம்பித்தது. கொஞ்ச நேரம் ஜன்னலுக்கு வெளியே பார்த்தார். பிறகு உள்ளே பார்த்தார். 'பகல் ஜர்னியே இப்படித்தான்' என்று தமக்குள் முனகிக்கொண்டார்.

''எப்படாப்பா இறங்கப் போறம்னு இருக்கு.... இங்கே இருக்கிற கோயம்புத்தூருக்குப் போக ஏழு மணி நேரமா? ஜப்பான்லே மணிக்கு முந்நூறு மைல் வேகத்திலே ரயில் விடறான். இவங்கள் தடவறாங்கள்....'' என்று உரக்க அலுத்துக் கொண்டார் யோகாக்காரர்.

பச்சைச் சட்டைக்காரர் நீண்ட கொட்டாவியின் மூலம் அதை ஆமோதித்தார்.

தூங்க முடியாமல் சிரமப்பட்ட நாமக்காரர், ''டே ஜர்னியே போர்தான்'' என்று கூறியவாறே சோம்பல் முறித்தார்.

பார்க்கிறதை யெல்லாம் உற்சாகமாகப் பார்த்து, பேசுகிறதை யெல்லாம் சுவாரஸ்யமாகப் பேசி, அந்தச் சூழ்நிலையையே ஜீவன் ததும்பச் செய்து கொண்டிருந்த அந்தச் சிறுவன், மிகச் சுகமாய்த் தூங்கிக் கொண்டிருந்தான்.!

# புதுமைப்பித்தனின் இயற்பெயர் என்ன?

## கல்லூரியில் 'குவிஸ்'

[மதுரை அமெரிக்கன் கல்லூரி. அளவற்ற உற்சாகம். சிறப்பான ஏற்பாடுகள். க்விஸ் நிகழ்ச்சியில் பங்கேற்க ஆறு மாணவர்களை ஏற்கனவே தேர்ந்தெடுத்திருந்தனர். 'கல்கி'யின் கேள்விகளைக் கொண்டு ஆங்கில உதவிப் பேராசிரியர் திரு நெடுமாறன் க்விஸ் மாஸ்டராக இருந்து போட்டியினை நடத்திக் கொடுக்க முன்வந்தார். கல்லூரி முதல்வர் திரு பி. டி. செல்லப்பா தலைமை தாங்க போட்டி தொடங்கியது.]

போட்டியில் பங்கேற்றவர்கள்:

(1) வி. ஹரிநாராயணன்
(2) கே. சேதுராமன்
(3) டி. என். கே. ரமேஷ்
(4) எஸ். வித்யா சங்கர்
(5) டி. கே. மஹேசன்
(6) கே. ரவி ஸ்ரீனிவாஸ்



✕ 'குவிஸ்'ஸில் பங்கேற்ற மாணவர்களும் 'குவிஸ்' மாஸ்டரும் முதல்வரும்



✕ ஹரிநாராயணன் முதல்வரிடம் பரிசு பெறுகிறார்.

**கேள்விகள்:**

1. ஒளியின் பிரகாசத்தை அளக்க உதவும் அடிப்படை அளவு ஆங்கிலத்தில் என்னவென்று அழைக்கப்படுகிறது?
(இக்கேள்விக்கான பதிலை அளித்து ரமேஷும் வித்யா சங்கரும் மதிப்பெண்ணைப் பகிர்ந்து கொண்டனர்.)
2. அமெரிக்காவின் புது மாதிரி அணுகுண்டான 'RRR bomb' என்பதன் விரிவு என்ன?
(எவரும் சரியான விடையைக் கூறவில்லை.)
3. கிரிக்கெட்டில் மேற்கிந்தியக் கோஷ்டியில் எந்தெந்த நாடுகள் இணைந்து ஒரு அணியாக விளையாடுகின்றன?
(மஹேசனும், ஹரியும் இணைந்து சரியான விடையைக் கூறினர்.)
4. 'Toxophily' என்பது எந்த விளையாட்டைக் குறிக்கும்?
(எவரும் விடையளிக்கவில்லை.)
5. 'Stagflation' என்றால் என்ன?
(சேதுராமன் சரியாக விடையளித்தார்.)
6. உடலின் எந்த அங்கம் சரியாக இயங்காததால் நீரிழிவு வியாதி உண்டாகிறது?
(சேதுராமன் சரியான விடையைக் கூறினார்.)
7. அமெரிக்காவின் தேசியவிளையாட்டு எது?
(சரியான விடையைக் கூறியவர் ரமேஷ்)
8. ஒரே அவையைக் கொண்ட சட்டமன்றமோ நாடாளுமன்றமோ ஆங்கிலத்தில் என்னவென்று அழைக்கப்படுகிறது?
(ஹரி சரியான விடையைக் கூறினார்.)
9. கால் பந்து ஆட்டத்தில் உலகக் கோப்பையை பிரேசில் எத்தனை தடவை வென்றுள்ளது?
(சரியான விடையை ரமேஷ் கூறினார்.)
10. 'Mustang' எனப்படுவது எது?
(ஹரி சரியான விடையைக் கூறினார்.)
11. 'Coral reef' என்றால் என்ன?
(ரமேஷ் சரியாக விடையளித்தார்.)
12. டெஸ்ட் கிரிக்கெட் ஆட்டத்தில் உலகிலேயே அதிகம் விக்கெட்டுகளை எடுத்தவர் யார்? எத்தனை விக்கெட்டுகள்?
(மஹேசன் சரியாக விடையைக்கூறினார்)
13. 'CETEKA' என்பது எந்த நாட்டின் செய்தி நிறுவனம்?
(வித்யா சங்கர் விடையளித்தார்.)
14. மெக்ஸிகோ நாட்டின் நாணயம் எது?
(ஹரி சரியாக விடையளித்தார்.)

15. லிப்யாவின் தலைநகரம் எது?
(இக் கேள்விக்கும் ஹரிதான் சரியான விடையைக் கூறினார்.)

16. ஹோம் கார்ட் பாதுகாவலர் இயக்கம் எந்த ஆண்டு தொடங்கப்பட்டது?
(எவரும் விடையளிக்கவில்லை.)

17. ஜப்பான் நாட்டில் எந்த வகையாக அரசு நடக்கிறது?
(ஹரிதான் சரியான விடையைக் கூறினார்.)

18. 'Give me a firm spot on which to stand and I will move the earth'
என்று கூறிய மேதை யார்?
(ரவி ஸ்ரீனிவாசன் சரியான விடையைக் கூறினார்.)

19. D. A. V. P. என்பதன் விரிவு என்ன?
(ரவிதான் இதற்கும் விடையளித்தார்.)

20. தற்போதைய மத்திய சட்ட அமைச்சர் யார்?
(ரவிதான் விடையளித்தார்.)

21. Izvestia என்றால் என்ன?
(சரியான விடையைக் கூறியவர் ரவி.)

22. இன்றைய தின செய்தித் தாளின்படி (22—3—80) சென்னை தங்க வெள்ளி மார்க்கெட்டில் 10 கிராம் வெள்ளியின் சில்லறை வியாபார விலை என்ன?
(பலவித விடைகள் வந்தன. சரியான விடையை எவரும் கூறவில்லை.)

23. உமையாள்புரம் சிவராமன் எத்துறையில் சிறப்புப் பெற்றவர் என்று கூற இயலுமா?
(ரமேஷ் சரியான விடையைக் கூறினார்.)

24. புரட்சி எழுத்தாளர் அமரர் புதுமைப் பித்தனின் இயற்பெயர் என்ன?
(இக்கேள்விக்கான விடை அளித்து ரவி ஸ்ரீனிவாஸ் மதிப்பெண் பெற்றார்.)

25. பேயாழ்வாரின் பிறப்பிடம் எது?
(எவரும் விடையளிக்கவில்லை.)

26. 'ibidem' என்பதன் பொருள் என்ன?
(எவரும் விடையளிக்கவில்லை.)

27. இந்திய ஆகாயப் படையில் Air Vice Marshal பதவிக்கு அடுத்த பதவி எது?
(ஹரி சரியான விடையைக் கூறினார்.)

28. 'Embargo' என்றால் என்ன?
(ரவி ஸ்ரீனிவாஸ் சரியாக விடையளித்தார்.)

29. ரேடார் கருவியைக் கண்டுபிடித்தவர் யார்?
(எவரும் விடையளிக்கவில்லை.)

30. 'ரஞ்சி கோப்பை' எந்த ஆண்டு ஏற்படுத்தப்பட்டது?
(சேதுராமன் சரியாக விடையளித்தார்)

அமெரிக்கன் கல்லூரி மாணவர்களின் IQ சிறப்பாக இருந்ததை க்விஸ் போட்டி வெளிப்படுத்தியது. குறிப்பாக ஹரி நாராயணனின் பொது அறிவுத் திறன் பிரமிக்கத் தக்க விதத்தில் இருந்தது. அவர்தான் போட்டியில் வென்று முதல் பரிசான ரூ. 50 பெற்றார். முதல்வர் பரிசுகளை வழங்கினார்.









✖ புதுமைப்பித்தன்
✖ ரேடார்
✖ உமையாள்புரம் சிவராமன்



✖ மாணவர்களிடையே இத்தனை சிரிப்பு என்றால் ஜோக் பிரமாதமான ஒன்றாகத் தான் இருந்திருக்க வேண்டும் !

இதன் தொடர்ச்சியாய்க் கலை நிகழ்ச்சிகளை மாணவர்கள் நடத்தினர். சாந்த பிரகாஷ் மிகச் சிறப்பாக மூன்று திரைப்படப் பாடல்களைப் பாடினார்.

அற்புதமான நகைச்சுவை நிகழ்ச்சியைத் தொகுத்து அளித்தார் ஏ. விவேகானந்தன். அவருடன் இணைந்து சேதுராமனும், உமா மகேஸ்வரனும் சிறப்பாக நடித்தனர். ஏ. சேகர், எம். ராம்தாஸ், சந்திரசேகரன் ஆகியோர் நிகழ்த்திய நிகழ்ச்சிகளும் சிறப்பாக அமைந்தன.

'க்விஸ் மாஸ்டர்' நெடுமாறன் நகைச்சுவை இழையோடப் போட்டியை நடத்தித் தந்தது சிறப்பு அம்சம்.

## விடைகள்

(1) Foot candle (2) Reduced Residual Radiation bomb (3) கயானா, டிரினிடாட், டொபாகோ, ஜமாய்கா, பார்படாஸ், விண்ட்வார்ட், லீவார்ட் தீவுகள். (4) வில்வித்தை (5) பொருளாதார மந்தமும், பண வீக்கமும் (stagnation and inflation) இணைந்து இருக்கும் பொருளாதார நிலை. (6) பான்கிரியாஸ் (7) பேஸ்பால். (8) 'Unicameral' (9) மூன்று முறை. (10) மெக்ஸிகோவில் காணப்படும் சிறிதான ஒரு வகை காட்டுக் குதிரை. (11) கடல்வாழ் ஜந்து தன் குடியிருப்புக்காகத் தன் உடலிலிருந்து வெளிப்படுத்தும் கடினமான பொருள். சிவப்பு நிறத்தில் ஏராளமாக இப்பவழக் கொடி சேரும்போது கடல் மட்டத்துக்கு உயர்ந்து பாறையாகவோ தீவாகவோ காட்சி தரும். Coral - பவழம் Reef - கடல் மட்டம் வரை உயர்ந்த மணல் குன்று அல்லது பாறை. (12) லான்ஸ் கிப்ஸ்; 309 விக்கெட்டுகள். (13) செக்கோஸ்லாவாகியா (14) பீலே (15) ட்ரிபோலி (16) சீனப் படையெடுப்பின் போது 1962ல் (17) அரசியல் நிர்ணயச் சட்ட ரீதியான முடியரசு (Constitutional Monarchy) (18) ஆர்க்கிமிடீஸ் (19) Directorate of Advertising and visual publicity) (20) லிவ்சங்கர். (21) சோவியத் அரசின் செய்தித்தாள். (22) Rs. 33.50/— (23) மிருதங்கம். (24) சொ. விருத்தாசலம். (25) மயிலாப்பூர். (26) இந்த லாடின் வார்த்தைக்கு அர்த்தம்: in the same place (27) Air Commodore (28) ஒரு பொருளின் ஏற்றுமதி இறக்குமதியைத் தடை செய்யும் அரசின் ஆணை. (29) ராபர்ட் வாட்ஸன் வாட். (30) 1934—35.

தொகுப்பு : நாயகன்

புகைப்படம்: மணி ஸ்டுடியோ, மதுரை.

## வெற்றியில் தோல்வி!

அணுமின் நிலையம் என்று ஆரம்பிக்கிறது அணுகுண்டு தயாரிப்பில் முடிகிறது. இதனால் அணு விஞ்ஞான அறிவைப் பரவ விடாமல் தடுக்க வல்லரசுகள் முயலுகின்றன. "அணுகுண்டு தயாரிப்பதில்லை" என்று உத்தரவாதம் அளிப்பவருக்கே அணு விஞ்ஞான அறிவை வழங்கி அணு மின் நிலையத்தை அமைக்க உதவலாம் என்பது நோக்கம்.



இந்தக் கோட்பாட்டின் உடனடி விளைவு யுரேனியம் என்ற மூலப் பொருளில் கள்ள மார்க்கெட், கள்ளக் கடத்தல். சாதாரண மார்க்கெட் பொருளாதார நியதிகள்தாமே சர்வதேச வியாபாரத்திலும் இயங்குகின்றன.

சஹாரா பாலைவனத்தில் தனிமனிதன் ஒருவனால் அணுசக்தி நிலையமொன்று அமைக்கப்பட்டுள்ளது; உலகிலேயே பெரிய யுரேனியச் சுரங்கமுள்ள ஸயர் என்ற இடத்திலிருந்து மூலப் பொருள் இந்த அணுசக்தி நிலையத்திற்கு அனுப்பப்படுகிறது என்ற தகவல் கிடைத்து, துப்பறியும் நிபுணர் டானும், இத்தாலிய ராணுவ வீரர் ரென்ஸோவும் ஸயருக்குப் போகின்றனர். யுரேனியம் 'மீவிரா' என்ற கப்பல் மூலம் கடத்தப்படுவதை இருவரும் அறிகின்றனர். கள்ளக் கடத்தல் மன்னன் பாரனின் காரியதரிசி அழகி ஹெல்காவை ரென்ஸோ சந்திக்கிறான். காதல் மலர்கிறது. அவள் மூலம் கள்ளக் கடத்தல் பற்றிய ரகசியங்கள் அறியப்படுகின்றன. ஒரு கப்பலில் யுரேனியம் கடத்தப்படுவதை அறிந்த ரென்ஸோ அக்கப்பலில் ஆபத்தான நிலையில் நுழையும்போது, அவனைக் காப்பாற்றுவதுடன், ஹெல்காவும் அவனுடன் பல ஆபத்துகளுக்கு உள்ளாகிக் கள்ளக் கடத்தல் கூட்டத்தினரிடமிருந்து தப்ப முயற்சிசெய்கிறாள். போராட்டத்தினிடையில் கொல்லப் படுகிறாள். இதற்கிடையில் டானின் தலைமையதிகாரி மேர், படையுடன் வந்து 'எலெக்ட்ரோ மாக்னடிக்' சுரங்க வெடிகளை வைத்து எதிரிகளை ஒழித்துக் கட்டி ரென்ஸோ, டான் இருவரையும் காப்பாற்றுகிறார். இந்த இரு சினிமா வீரர்களின் குறிக்கோள் வெற்றிகரமாக முடிந்தது.

ஆனால் இதனால் யுரேனியத்தில் கள்ளக் கடத்தலே நின்று விடுமா? உலகிலே அணுகுண்டு தயாரிப்பதில் ஆர்வமுடைய வக்ர மனம் படைத்தவர்கள் உள்ளவரை அதில் கள்ளக் கடத்தல் நடந்து கொண்டு தான் இருக்கும்.

-டி. எம். ஆர்.

THE URANIUM CONSPIRACY


ஓ லைலா... லைலா...
எங்கேயிருக்கிறாய்
எனதருமை லைலா...
அடுத்த அறையில்தான்
அன்பே, கொசுக்களின்
முத்த மழைக்கிடையே
இருக்கிறேன்.
உங்கள் வாழ்வில் காதல் மலரட்டும்,
கொசுக்கள் மறையட்டும்.
டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்
எல்லாப் "பொருள்"விலைகளும்
உயர்வு?! நல்லவேளை
சுருள்'விலங்குற மாதிரி
கேட்டுச்சு!
எல்லாப்
பொருள்
விலைகளும்
உயர்வு
கொசுக்களை விரட்ட சிக்கனமான வழி
டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்
காணவில்லை
அன்பு மகனே,
வீட்டிற்கு திரும்பிவா கண்ணே!
வீட்டிலிருந்த
கொசுக்களையெல்லாம் இப்போது
விரட்டியடித்துவிட்டோம்.
உன் அன்புத்தாய்
டார்ட்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்
கொசுக்களை விரட்டுகிறது, மனிதர்களை அல்ல.
டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்
டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்
தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
..போர்ட், பம்பாய்-400 023. ..போன்: 273831
everest/80/BCL/100-tm

**பா**லகோபால் அந்தப் புத்தகக் கம்பெனிக்குள் கிட்டத்தட்ட அரை மணிக்கும் மேலே சுற்றிச் சுற்றி வந்திருப்பான். தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு பகுதிகளையும் துளைத்தெடுத்து விட்டான். ஊஹூம். அவனுக்குத் தேவையான புத்தகம் அங்கு கிடைக்கவில்லை. சட்!

''மே ஐ ஹெல்ப் யூ?'' — அண்மையில் வெகு இனிமையான குரல் ஒலித்தது. பாலகோபால் நிமிர்ந்து பார்த்தான். பளிச்சென்று ஊதா நிறத்தில் புடவை உடுத்திக் கொண்டு ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவளது நீள்வாட்டமான முகத்துக்கு அந்த 'ஹேர் ஸ்டைல்' சற்றுப் பொருத்தமில்லாதது போல் தோன்றியது.

''வந்து...வந்து....'' என்று சொல்ல முடியாமல் திணறினான் பாலகோபால்.

''இது முழுக்க முழுக்க 'பிலாஸபி' பகுதி. உங்களைப் பார்த்தால்...'' என்று சற்றுக் கேலியாகச் சொல்லிச் சிரித்தாள் அவள்.

''நோ நோ. எனக்கு இல்லை. என் சிநேகிதனுக்கு.''

''ப்ளீஸ், கூச்சப்படாதீர்கள். நான் அப்போதிருந்தே கவனித்துக் கொண்டிருக்கிறேன். புஸ்தகத்தைப் பார்ப்பது, வைப்பது, மறுபடியும் எடுப்பதுமாக இருக்கிறீர்களே! உங்கள் டேஸ்ட் எந்த மாதிரி? லிட்டரேச்சர், ஸையன்ஸ், ஃபிக்ஷன்...''

சில நிமிடம் பொறுத்து, '' 'டெஸிஷன் மேக்கிங்'கைப் பற்றி ஏதாவது புஸ்தகம்...'' என்று இழுத்தான்.

அவளால் சிரிப்பை அடக்க முடியவில்லை. வாய் விட்டுச்சிரித்து விட்டாள். ''என்ன புஸ்தகம் எடுப்பது என்பதை உங்களால் டிஸைட் பண்ணமுடியவில்லையாக்கும்!'' என்றவள் ''என் கூடப் பின்னால் வாருங்கள்'' என்று அழைத்துப் போனாள்.

அடுத்த பத்தாவது நிமிடம் பாலகோபால் கையில் இரண்டு புத்தகங்களுடன் வெளியே வந்தான். அவன் மனம் ஒரே ஆச்சரியத்தில் மூழ்கியிருந்தது. 'எப்படிடா இவ்வளவு சீக்கிரம்' – இல்லை, 'எப்படிடாவென்று அந்தப் பெண் புத்தகங்களை எடுத்துவிட்டாள்? கேவலம் ஐந்தாறு புத்தகங்களில் தனக்குத் தேவையானதை உடனே தேர்ந்தெடுக்க முடியவில்லையே? எப்படி 'பாங்கில்' குப்பை கொட்டி முன்னுக்கு வரப் போகிறோம்?'

பஸ் ஸ்டாண்டில் நின்றான். 12 வந்தது. ஏறலாமா? 12-ஏல் போனால் நேராக வீட்டு வாசலில் இறங்கிவிடலாம். ஆனால் வ்ரத்தாமதமாகுமே! பஸ்ஸில் ஏறக் கால் வைத்தவன், பின்னால் வேறு 3 வண்டி வருவதைப் பார்த்துக் கீழே இறங்கினான். ஆனால் அது 12-ஏ இல்லை.

''என்ன சார்? எந்தப் பஸ்ஸில் ஏறுவது என்றும் தீர்மானிக்க முடியவில்லையா? டெஸிஷன் மேக்கிங் புஸ்தகத்தைப் படித்த பிறகு முடிவு செய்யுங்கள்!''

கேலியான குரல் காற்றில் மிதந்து வந்தது. அவள்தான். மிஸ் புக்ஷாப்!

''யாரது மீரா? உனக்குத் தெரியுமா?''

ஓகோ... அவள் பெயர் மீராவா?

சாவகாசமாகத் தீர்மானம் செய்து பஸ் பிடித்துப் புத்தகமும் கையுமாக வீடு சேரும்போது, பாலகோபாலுக்கு இரவு மணி ஒன்பதுக்கு மேலாகி விட்டது.

**பா**லகோபால் ஓர் அரசாங்க பாங்கில் அதிகாரியாகப் பணிபுரிந்து வந்தான். இயல்பிலேயே கூச்ச சுபாவம், சிறு வயதிலிருந்தே 'அதைச் செய்யாதே', 'இது தப்பு' என்று உற்றாரும், பெற்றோரும் சொல்லிக் கொண்டேயிருந்ததால், தான் எதைச் செய்தாலும் தவறாகத்தான் இருக்கும் என்ற உணர்வு அவனுள் ஊறிவிட்டது. படிப்பில் மட்டும் சுட்டிகையாக இருந்ததோடு, கொஞ்சம் சிபாரிசும் கிடைத்துக் கொள்ளவே பாங்கில் அதிகாரியாகச் சேர்ந்து விட்டான். இரண்டு வருஷம் அவனுக்கு 'ப்ரொமோஷ'னும்.

''என்ன பாலகோபால்! நான் லீவில் போகி



றேன். சூரியும் (சீனியர் அக்கவுண்டெண்ட்) இல்லை. நீ 'ஆக்ட்' பண்ணுவாயா?' என்று ஏஜெண்ட் அவனிடம் கேட்டார்.

பாலகோபால் கவனம் வேறு எங்கோ இருந்தது. 'எம். பி. லெட்ஜர் 'டேலி' ஆகவில்லை. கூட்டலில் பிசகு இருக்குமோ?'

''சொல்லு.''

பாலகோபால் நிமிர்ந்தான். ''காலேஜ்லே நடிச்சிருக்கேன். இப்போ டச் விட்டுப் போய் விட்டது. என்ன நாடகம்? என்ன ரோல் சார் எனக்கு?''

'மடையன்' என்று ஏஜண்ட் உதட்டோடு முணுமுணுத்துக் கொண்டார். ''அதைச் சொல்லலை. நீதான் என் லீவு பீரியடிலே ஏஜெண்டா ஆக்ட்பண்ணனும் என்கிறேன்!''

''சார், சார்! வேண்டாம் சார். நான் ப்ரொபேஷன் பீரியடில் இருக்கேன். ஏதாவது ஆனால் கஷ்டம்!'' என்று கெஞ்சினான்.

ஏஜெண்ட் பிடிவாதமாக இருந்தார். ''அதெல்லாம் முடியாது. ஹெட் ஆபீஸில் வேறு ஆள் போடச் சொல்லிக் கேட்டால் எனக்குத்தான் அவமானம். யூ கேரி ஆன்.''

பாலகோபால் ஏஜண்டாக நடித்த நாட்கள் அந்தப் பாங்கின் வரலாற்றில் இடம் பெறுமோ என்னமோ. ஆனால் அவனைப் பொறுத்த மட்டில் முக்கியத்துவம் பெறும். தனக்குச் சொல்லித் தரப்பட்டிருந்த அறிவுரைகளை அப்படியே நூற்றுக்கு நூறு கடைப்பிடித்தான். யார் வந்தாலும் சரி, என்ன கேட்டாலும் சரி, ''ஏஜெண்ட் லீவு'' என்ற வார்த்தையை மாத்திரம் உச்சாடனம் போல் சொல்லி வந்தான்.

அன்று காலை சங்கர் (சூபர்வைஸர்) அவனிடம் வந்து, ''ஸார், ஸிக்மா ஹார்ட்வேர் ஸாக்கு செக் வந்திருக்கு. ஆயிரம் ரூபாய் குறைகிறது. பாஸ் பண்ணிவிடலாமா?'' என்று கேட்டான்.

''ஏஜண்ட் லீவு. வரட்டுமே?''



# என்ன முடிவு எடுப்பது? எப்படி எடுப்பது?

வாதூலன்

சங்கர் சற்று உரக்க, ''சார், இது இளிய ரிங்கில் வந்த செக். திருப்பி அனுப்பணும், இல்லே பாஸ் பண்ணணும். என்ன சொல்றீர்கள்?'' என்றான் மறுபடியும்.

''பார்ட்டி எப்படி?''

சங்கர் ஆள் எம்டன். அரசியல்வாதி போல ''பார்ட்டி தேவலே; ஆனால் சில சமயம் செக் திரும்பியும் போயிருக்கிறது'' என்றான் பட்டும் படாததுமாக.

''சரி, பாஸ் பண்ணு!'' என்று செக்கில் கையெழுத்துப் போட்டு அனுப்பினான். ''போன் பண்ணிச் சொல்லு.''

அன்றென்ன, இரண்டு மூன்று நாட்கள் ஆகியும் பார்ட்டி பணம் கட்டவில்லை. முதலாளியைத் தேடிப் பிடித்துப் போன் செய்தால், ''அட! அது திருப்பி அனுப்பிவிட வேண்டிய செக் சார்! 'ரேட்'டிலேயே வித்தியாசம் இருந்ததே!'' என்றார் அவர்.

'சரி; இது தனக்கு ஒரு பாடம். எச்சரிக்கையாக இருக்க வேண்டும்' என்று எண்ணிக் கொண்டான் பாலகோபால். மறுபடியும் அதே போன்ற பிரச்னை முளைத்தது.

''என்னது! பணம் இல்லையா? ரிடர்ன் இட் லே!'' என்று யார், என்ன என்று கவனியாமல் திருப்பிவிட்டான்.

மறுநாள் குறிப்பிட்ட நபர் வரவில்லை. ஏஜெண்டே விசிட்டைக் கான்ஸல் செய்து திரும்பினார். வெறுமனே வரவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு சீறலுடன் ''என்னப்பா பாலகோபால்! பிராஞ்சையே குட்டிச் சுவர் பண்ணிடுவே போலிருக்கே? ஓர் ஆயிரம் ரூபாய் செக் பாஸ் பண்ணி 'ஓவர் டிராப்ட்' கொடுக்கக் கூடாது? அவ்வளவுக்குக் கூடத் தைரியமில்லையா? அவரிடமிருந்து ஒரு பெரிய டிரஸ்ட் டெபாஸிட் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். சேச்சே! நீ சும்மா கூட்டல் கழித்தலைப் பார்க்கத்தான் லாயக்கு!'' என்று படபடவென்று பொரிந்து தள்ளினார்.

பாலகோபால் அவமானத்தால் குறுகிப் போனான். கொஞ்ச நாட்கள் இதேவருத்தத்தில் இருந்தான். அப்புறம் 'வீக்லி' விளம்பரத்தைப் பார்த்தபோது, 'டெஸிஷன் மேக்கிங்'கைப் பற்றியும் புத்தகங்கள் இருக்கின்றன என்பது தெரிய வந்தது. அவைகளைப் படித்துத் தன்னை 'ஒரு மாதிரி'யாகத் தயார்ப்படுத்திக்கொள்ளலாம் என்று முடிவுக்கு வந்தான். அந்த 'வைபவத்தை'த்தான் ஆரம்பத்தில் பார்த்தோமே!

விடுமுறை நாள்.

''என்னடா, உங்கள் பாங்கில் ஏதோ ஸெமினார் நடத்துகிறார்களாமே! பேப்பரில் அமர்க்களமாய்ப் போட்டிருக்கிறது!'' என்று அப்பா அவனிடம் தினத் தாளைத் தந்தார்.

பாலகோபால் பிரித்துப் பார்த்தான், தன்னையும் அறியாமல் துள்ளிக் குதித்தான்.

'இரண்டு நாள் வகுப்புகள் — 'டெஸிஷன் மேக்கிங்' சேர்ந்து பயன் பெறுங்கள்'.

இதற்குக் கூடவா வகுப்பு! சேரலாமா, வேண்டாமா? ரூபாய் நூறு 'ஃபீஸ்' அதிகம் இல்லையோ? அதிகமாவது! முன்னடைவுள்ள அதிகாரியாகத் தன்னைத் தயார்ப்படுத்துமே! மேலே சொன்ன சாதக பாதகங்களை மீறி வகுப்பில் சேருவதென்ற முடிவை எடுத்துவிட்டான் பாலகோபால்.

ஞாயிற்றுக் கிழமை காலை வேளையில் திலகர் ஹாலில் காட்சியளித்த கூட்டம் பாலகோபாலுக்குத் தெம்பை அளித்தது.

வகுப்பை எடுத்தவர், ரொம்ப அனுயாசமாகப் பேசினார். ஆரம்பத்திலேயே ''கல்யாணமானவர்கள் எல்லாம் கையைத் தூக்குங்கள்!'' என்றார். ''உங்களுக்குக் கவலை இல்லை. டிஸைட் பண்ண வீட்டில் மனைவி இருக்கிறாள்!'' என்று ஜோக் அடித்தார்.

அட, மீரா! அவளும் வந்திருக்கிறாளே? அதுவும் லெக்சரருக்குப் பக்கத்தில்!—

மேடையில் அவர் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போனார். அவசரப்பட்டு எடுக்கும் முடிவு, ரொம்ப நிதானத்துடன் எடுக்கும் முடிவு — இதையெல்லாம் விளக்கிச் சொன்னதும், கணக்கு மாதிரி ஒன்றைக் கேட்டார். ''வழி தெரியாத பாலைவனம். புஸ்தகம், பீர் பாட்டில், உடைந்த கண்ணாடி இவற்றில் எதைக் கொண்டு போவீர்கள்?''

யாரிடமெல்லாமோ கேட்டார்கள். சிலர் எதிர்க் கேள்விகள் போட்டார்கள். கடைசியில்— ''மிஸ்டர் பாலகோபால்!''

தாக்கி வாரிப் போட அவன் எழுந்து நின்றான். ''மீரா, மீரா...'' என்று திக்கித் திணறினான்.

''யூ மீன் மிர்ரர்?''

''யெஸ்... யெஸ்'' என்றான் அவசரமாக.

''குட். கரெக்ட் ஆன்சர். யூ ஸீ—'' என்று அவர் தொடர்ந்தார்.

வெளியே வந்ததும், ''உங்களை எதிர்பார்க்கவே இல்லை!'' என்றான் மீராவிடம்.

''ஆனால் நான் எதிர்பார்த்தேன். எப்படி? புஸ்தகம் படித்ததனால் 'இம்ப்ருவ்மெண்ட்' இருக்கிறதா? அட்லீஸ்ட் எந்தப் பஸ்ஸில் ஏறலாம் என்றாவது தீர்மானிக்க முடிகிறதா?''

''சொல்வதற்கில்லை. இன்று நேரமாகிவிட்டதென்று ஆட்டோவில் வந்தேன்.''

''பார்ப்போம். நெக்ஸ்ட் வீக் க்ளாஸ் இருக்கிறதே! மாமா கூப்பிடுகிறார்'' என்று மீரா புறப்பட்டாள்.

''மாமாவா!'' லெக்சரர் பின்னால் சென்றான்.

''சாப்பிட்ட பில்லுக்கு இப்படியா சார் பொடிச் சில்லறையா தர்றது?''

''நான் சாப்பிட்டது தான் பஜ்ஜி தானுங்க..''

-மேகலை






# எல்லாவற்றிலும் ஆர்வம்!



# எப்பொழுதும் துடிதுடிப்பு!

உங்களுடைய குழந்தை, வளரும் பருவத்தில் ஒவ்வொரு வினாடியும் அதிகமான சக்தியை செலவழிக்கின்றான். அவனுக்கு வேண்டிய சக்தியை அளிக்கிறது—மால்ட், சாக்லெட், பால் நிறைந்த, சுவைமிகுந்த பூஸ்ட். ஏனெனில், பூஸ்ட் முழு ஆடைப் பால் கோதுமை, பார்லி மால்ட், மற்றும் கோகோவிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

உங்களுடைய குழந்தை ஒவ்வொரு நாளும், நாள் முழுவதும் படிப்பில் ஆர்வத்துடனும், விளையாட்டில் துடிதுடிப்புடனும் இருப்பதற்கு, சக்தி தரும் எரிபொருள்களை அவனுக்கு அளியுங்கள்.




# துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.

## பூஸ்ட்

மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

B-5621 TAM 10




'எருமை வெட்டிப் பாளையம்' என்ற ஒரு சிற்றூர் செங்கல்பட்டு மாவட்டத்தில் பொன்னேரி வட்டத்தில் உள்ளது. வெற்றிக்குரிய அதி தேவதையான காளி கோயில் இங்கு உண்டு. எருமையைப் பலியிடும் வழக்கம் இங்கே நிலவி வந்ததால் இவ்வூர் 'எருமை வெட்டிப் பாளையம்' என்ற பெயர் பெற்றது.
பி. நாராயணன்

---

''ஆமாம், ஆனால் அவருக்குப் பிள்ளைகள் இல்லை.'' — அர்த்தமுள்ள புன்னகை உதிர்த்தாள்.

மறு வாரம் என்ன, அதற்கு அப்புறமும் கூடச் சந்தித்தார்கள். பேசினார்கள். பழகினார்கள். ''என்ன? உங்களுக்கு விருப்பம் தானே? மாமா வேறு ஜாதகம் பார்த்துக் கொண்டிருக்கிறார். இதை 'டிலைட்' பண்ணக்கூடப் புஸ்தகம் வேணுமா?'' என்று கேட்குமளவுக்கு நெருக்கம் வளர்ந்தது.

'நீயே ஒரு புஸ்தகம். உன்னிடமுள்ள ஒவ்வொரு பகுதியையும் ரசிக்கிறேன்' என்று நயம்படச் சொல்ல வேண்டும் என்று பாலகோபாலுக்கு நா துறுதுறுத்தது. ஆனால் அவன் சொல்லவில்லை.

பாங்கில் கால் ஆண்டு வேலை வெகு மும்முரமாக நடந்து பாலகோபாலின் மூச்சைப் பிடித்துக் கொண்டிருந்தது.

''சார், ஒன் மினிட்!'' என்று சங்கர் அவன் அருகில் வந்தான். கையில் ஒரு செக்.

''என்ன வழக்கமான ப்ராப்ளம்தானே? சூரியிடம் கேள். இல்லே, ஏஜெண்டிடம் போ!'' என்றான் பாலகோபால் எரிச்சலுடன்.

---

''டில்லியிலிருந்து வந்திருக்கும் உன் அத்தான்ஏன் இப்படி ஸ்வாமியைத் 'தூர இருந்து தரிசனம் செய்யறார்.?''

''அவர் 'டில்லி தூர்தர்ச'னில் வேலை செய்கிறாரே!''
-எஸ். சந்திரசேகர்



''சூரி பெர்மிஷனில் வெளியே போயிருக்கிறார். ஏஜெண்ட் இல்லே.''

''அவர்கள் இருக்கும்போதே சொல்வதற்கென்ன?''

''நீங்கதான் இப்போ இங்கே 'இன்சார்ஜ்'. செக்கைப் பாஸ் பண்ணலாமா வேண்டாமா என்று சொல்லுங்க'' என்று கூறி செக்கை மேசையின் மீது வைத்துவிட்டுப் போனான்.

செக்கை மேலோட்டமாகப் பார்த்தான். அவனுக்குத் திக்கென்றது. ரூபாய் ஐயாயிரம். ஓ மை காட்! யார் பார்ட்டி? வாசவி இண்டஸ்ட்ரீஸ்! கடன் வசதி உள்ள பார்ட்டிதான். ஆனால் கடன் எல்லையை மீறி இவ்வளவு தொகையை அனுமதிக்க உரிமை இருக்கிறதா? கிடையாது—

கம்பெனிக்குப் போன் செய்து எம். டி.யிடம் கேட்கலாம். ஊ ஹூம், அவர் இல்லே.

சரி, ஏஜெண்ட் இப்போது எங்கே சென்றிருக்கக் கூடும்?

நேரம் கிடுகிடுவென்று விஷம் போல் ஏறியது.

எந்த பாங்கியிலிருந்து வந்திருக்கிறது? போன் பண்ணி, டாக்ஸியில் போய், செக்கைத் திருப்பி—

அவன் தீர்மானித்த அதே சமயம், ஏஜெண்ட் உள்ளே நுழைந்தார். — வாசவி இண்டஸ்டரீஸ் எம். டி.யுடன். ''இவர்கள் செக் ஏதாவது வந்திருக்கிறதா?''

''ஆமாம் சார். ஒரு பெரிய செக்.''

பாலகோபால் எடுத்துக் காட்டினான். அதைப் பார்த்தாரோ இல்லையோ எம். டி. துள்ளினார். ''இதேதான் சார். பாருங்க, ஐயாயிரத்தை எப்படி மாற்றி யிருக்கான் என்று! கையெழுத்துக்கூட போர்ஜரி சார்!

''ஒரு நாள் செக்கைப்பாதி எழுதி டிராயரில் வைத்துவிட்டுப் போனேனா?....'' என்று சொல்லிக் கொண்டே போனார். பிறகு அதிசயித்து ''செக்கைத் திருப்பி இருந்தால் என் பெயர் கெட்டுப் போயிருக்கும். பாஸ் பண்ணியிருந்தால், இவ்வளவு 'க்ளியராக' போர்ஜரியைக் கண்டுபிடித்திருக்கவும் முடியாது. அது எப்படி சார் இப்படியே வைத்திருந்தீர்கள்?'' என்று கேட்டார்.

இனிமேலும் மௌனமாக இருக்கப் பாலகோபால் மடையனா என்ன? ''ஐ ஹேட் எ டவுட். அதனால்தான்...''

''நம்ப அக்கவுண்டண்ட் ரொம்பக் கெட்டிக்காரன் சார்'' என்றார் ஏஜெண்ட்.

பாலகோபால் புளகாங்கிதம் அடைந்தான். (முடிவு சரியானது; காரணத்தை மட்டும் வெளிப்படுத்தாதே!)

அதற்குப் பிறகு செக்கை எடுத்துக் கொண்டு மற்ற பாங்குக்குப் போனதும், ஒரு மோசடிக் கும்பலை மாட்டிக் கொண்டதும் கதைக்குத் தேவையில்லாத செய்தி.

பாலகோபால் பெயர் பாங்கில் மிகப் பிராபல்யம் அடைந்ததும், அடுத்த முகூர்த்தத்திலேயே மீராவை அவன் மணம் புரிந்து கொண்டதும்தான் முக்கியம்.

இப்போதெல்லாம் டெசிஷன் மேக்கிங் வகுப்புக்களைச் சில சமயம் பாலகோபால் எடுக்கிறான் என்று கேள்வி!

# "நவ பாரதத்தின் ஆலயங்கள்"






ஆலைகள், அணைக்கட்டுகள்,
பாலங்கள் முதலியன
"நவ பாரதத்தின் ஆலயங்கள்"
சிற்பக் கலைஞர்களும், பொறி இயல்
நிபுணர்களும், நவீன ஆலயங்களைக்
கற்பனையில் வடிக்கிறார்கள்.
ராக்ஃபோர்ட் சிமெண்ட் அவர்களின்
கருத்தை உறுதியாக ஆக்கிப் படைத்து
வடிவம் தருகிறது.

ராக்ஃபோர்ட் தனிச் சிறப்பின் மரபுக்கு ஒரு இலக்கணம்

**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்**
டால்மியாபுரம்–621651 (தமிழ் நாடு) தலைமையகம் "ஹன்ஸாலயா"
(11, 12ம் மாடி) 15, பாரகம்பா ரோட், நியூ தில்லி–110001.

GOVAN DCB.79.TAM

படத்தில் புதிதாக, வித்தியாசமாக எது வும் இல்லை: எல்லாம் பழைய சமாசாரங்கள் தான். சொல்லும் பாணியில்தான் வித்தி யாசத்தைக் காட்ட முயன்றிருக்கிறார்கள்.

முதல் மனைவி, ஸ்ரீவித்யா; அதிகம் படிக் காதவள், சாது. இரண்டாவது மனைவி 'படாபட்' ஜயலட்சுமி, படித்தவள், நல்ல பதவிகள் வகித்தவள். இவர்களிடம் அகப் பட்டுக்கொண்டு திண்டாடுகிறவர் ஸ்ரீகாந்த்.

ஸ்ரீவித்யாவின் பார்வை, பேச்சு, நடை, உடை, பாவனை எல்லாமே அற்புதம். சில இடங்களில் குரலைத் தாழ்த்திப் பேசியே அமர்க்களப்படுத்தி விடுகிறார்.

'படாபட்' ஜயலட்சுமி அஸிஸ்டெண்ட் மானேஜராக வரும்போது நிமிர்ந்து நிற்கும் பாணியும், அதிர்ந்து பேசும் வாசுவமும் பிர மாதம்! முன்கோபம் அவருக்குத் தனிக் கவர்ச்சி!

நாகேஷ், ஸ்ரீகாந்தின் மாமா; வீட்டு நிர் வாகம் அவர் கையில். நீண்ட நாளைய நடிப் பின் அனுபவம், ஒவ்வொரு 'ப்ரேம்'மிலும் காண முடிகிறது. இயல்பான நடிப்பு; 'குபுக்' கென்று சிரிக்க வைக்கும் பேச்சு!

பூர்ணம் விசுவநாதன், ஜயலக்ஷ்மியின் தகப் பனார்; கட்டுக் குடுமியோடு வரும் அவரது பட்டிக்காட்டுப் பாணி மிகவும் சுவையானது.

வாத்தியாராகவும், சமய சஞ்சீவியாக அந் தக் குடும்பத்துக்கு உதவும் நண்பனாகவும் மௌலி தனியானதொரு காரெக்டர்! அவ ரால் சிரிக்க வைக்கவும் முடிகிறது. கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப் புக்களும் அவருடையவைதாம்.

எஸ். ஜானகியும், சாவித்திரியும் பாடும் ''அழகிய பெண் ஒரு சங்கீதம்'' என்ற வாலியின் பாடல் கேட்க இனிமையாக இருக் கிறது. படத்தின் முற்பகுதி உண்மையி லேயே வித்தியாசமானதுதான். இடை-வேளைக்குப் பிறகு என்னதான் சுவையான காட்சிகளும் 'சுருக்' வசனங்களும் வந்து கலையூட்டினாலும், இந்த இரண்டு பெண் டாட்டிக்காரன் சமாசாரம், பழைய, மிகப் பழைய பாமா விஜயம் கதைதானே!

இந்தக் காலத்தில், படித்த, சுயமரியாதை யுள்ள உத்தியோகம் பார்க்கும் விவேகமுள்ள பெண் — ஏற்கனவே தாரமும், குழந்தைகளும் உள்ள ஒரு நடுத்தர வயதுக்காரனை இரண் டாந் தாரமாக மணக்க இசைவாளா? இப்படி யெல்லாம் சொன்னால், திரைக்கதை திண்டாடிப் போகுமே என்கிறீர்களா? நன்றாகத் திண் டாடட்டும். சினிமாவுக்குப் போய்விட்டு நாம் மட்டும் தான் திண்டாட வேண்டுமா என்ன?

– காந்தன்

# இவர்கள் வித்தியாசமானவர்கள்



# வித்தியாசமான மாமனார் மகள்



**பாமா கோபாலன்**

செந்தில் யோசித்தான். மனைவியை வேலைக்கு அனுப்பலாமா? ஹைட்ரஜன் பலூன்களாய் உயரப் பறக்கும் விலைவாசியை அவள் உதவியுடன் எட்டிப் பிடிக்க வழி செய்து கொண்டால் என்ன?

பஸ் ஓடிக் கொண்டிருந்தது. மயிலைக்குப் போக வேண்டும்.

'படவா ராஸ்கல் ஸார் அந்த மானேஜர்... ஆபீஸ் முடிஞ்சப்புறம்தான் ஸ்பெஷல் நோட்ஸ் தர்றானும்....அதுவும் ஸ்டெனோ தான் இருக்கணுமாம்....'

நின்று கொண்டிருந்த இருவர் பஸ் குலுக்கலுடன் பேச்சையும் குலுக்கினர். பெண்கள் வரிசையில், சவ்ஸ் வீக்லியில் புதைந்திருந்த இரு விழிகள் உயர்ந்தன. ஸ்டார் அண்ட் ஸ்டைலில் இந்தி நடிகனின் பரந்த தோள்களையும், மீசை இல்லா வழுவழுப்பான முகத்தையும் ரசித்த இன்னொரு இளசு பெருமூச்சு விட்டது.

'ம்... இதெல்லாம் தெரிந்திருந்தும் ஏன் ஐயா பெண்களை வேலைக்கு அனுப்புகிறீர்கள்' என்ற மௌன மொழியில் பேசினர்.

செந்தில் தலையை ஆட்டிக் கொண்டான்.

'ஹூம்... வேலைக்குப் போகிற பெண்கள் எல்லோரும் கெட்டவர்கள் அல்ல; கெட்டவர்கள் ஆக்குவதே ஆண்கள்தானே? ஒரு பெண் தானாகவா கெட்டுப் போக முடியும்?' மனத்துக்குள் நிமுற் போர்.

''ஓவர் டைம் ஒர்க் பண்ணினால் ரூபாய் தருவதாக இருக்கும் ஆபீஸாக இருந்தால்... பெண்களே அதிக நேரம் தங்கி வேலை செய்யக் கூடாதா?''

''ஓய்! நீர் சொல்வதெல்லாம் அதீதக் கற்பனை. இவளோட அவன் தனியாப் பேசணும்...அதான் சரி. நான் வரட்டுமா? நானைக்கு வழக்கம் போல டெர்மினஸ்லே!''

செந்தில் தீர்மானம் செய்து கொண்டான். மீனு பட்டதாரி. டைப் அடிக்கத் தெரிந்தவள். டெலிபோன் ஆபரேட்டர் டிரெயினிங் எடுத்திருக்கிறாள். சரளமான இங்கிலீஷ்.

'எஸ்... அவளை வேலைக்கு அனுப்பியே தீரவேண்டும். வீட்டில் குழந்தைத் தொல்லை இல்லை.... முந்நூறோ, நானூறோ வரட்டுமே'

மயிலைக் குளக் கரையில் இறங்கிக்கொண்டான்.

வீட்டு வாசலில் புதிய காலணிகள் வரவேற்றன. ஓ! மாமனார் வந்திருக்கிறாரா?

உள்ளே நுழைந்தான். ஊஞ்சலில் மாமனார் அருகே மீனு காப்பித் தம்ளருடன் நின்றாள்.

''வாங்க மாப்பிள்ளை! குட் நியூஸ்....! நான் வீட்டுக்கு வரும்போது மீனு கொல்லையில் இருந்தாள், தலையைப் பிடித்துக் கொண்டு....''

செந்தில் அதிர்ந்தான். இன்பச் செய்திதான். இருந்தாலும் இவளை வேலைக்கு அனுப்பலாம் என்ற முடிவில் இருக்கும்போது....

சமாளித்துக் கொண்டான்.

''ஓ! அப்படியா மாமா!'' என்றவன், மீனுவின் விழிகளைச் சந்தித்தான். குறும்பு பளிச்சிட்டது. இவன் மனத்தில் முந்நூறோ, நானூறோ கொஞ்சம் கொஞ்சமாய்க் கரையத் தொடங்கியது.

நாற்காலியில் அமர்ந்தான்.

''என்ன பலத்த யோசனை?'' — காப்பியைக் குடித்துக் கொண்டே கேட்டார் முருகேசன்.

''...மீனுவுக்கு ஒரு வேலை கிடைக்கும் போல இருக்கு.... இவளை வேலைக்கு அனுப்பலாம்னு இருந்தேன்....'' மெதுவாகப் பேசினான் செந்தில்.

மீனுவின் விழிகளில் ஆர்வம் மின்னியது. நைலக்ஸ் புடவை, கை நகபீல்ஸ், கடிகாரம், தோளில் தொங்கும் பை, ஆபீஸிலிருந்தே டெலிபோனில் செந்திலுடன் பேச்சு...

''ரொம்ப நன்னாயிருக்கு. மீனு வேலைக்குப் போறதாவது?'' முருகேசன் உரத்த குரலில் கேட்டார். எம். பி. பதவிக்குப் போட்டி மனு தாக்கல் செய்யச் சொன்னது போல!

மீனுவின் கண்கள் மூடிக் கொண்டன. போச்சு எல்லாமே போச்சு. வழக்கமான மத்தியானத் தூக்கம். அம்மா பால், அம்மா, பேப்பர்... அம்மா பூ... மூணு முழம் தரட்டுங்களா... மளிகைக் கடை லிஸ்ட்... சேசே!

''மீனுவை வேலைக்கு அனுப்பாதீங்க.... அதுவும் இப்ப இருக்கிற நிலையிலே வேண்டவே வேண்டாம்.''

''மாமா, அவளும் சம்பாதித்தால் குழந்தைக்கு நல்ல போஷாக்குத் தரமுடியுமே?'' செந்தில் சாதாரணமாய்ச் சொன்னான்.

''உங்களுக்குச் செலவுக்குப் பணம்தானே வேணும்?'' முருகேசன் குரலில் உறுதி தொனித்தது.

செந்தில் மௌனமானான். மீனுவின் கனவுகள் கலைந்தன.

''இது நாலாம் மாசம்'' என்றாள் மீனு.

''எதைச் சொல்றே? உங்கப்பா மாசா மாசம் முந்நூறு அனுப்பி வைக்கிறாரே, அதைச் சொல்றியா?'' செந்தில் கேட்டான்.

''இரண்டும்தான். அதிலேயிருந்துதானே இதுவும் ஆரம்பித்து விட்டது?''

''மீனு... பெண்ணைக் கட்டிக் கொடுத்த பிறகு அவள், கணவன் ஆசைப்படிதானே இருக்கணும்... உன் அப்பா இருக்க விட மாட்டேங்கிறாரே?''

''என்னங்க பண்றது? நான் அவருக்கு ஒரே பொண்ணு. ஆபீசிலே போய் நான் கஷ்டப்படறதை அவர் விரும்பலே,''

கட்டிலில் அவன் சற்றுப் புரண்டு படுத்தான். சுழலும் மின்விசிறியைப் பார்த்தபடியே உறங்கிப் போனான்.

**ம**றுநாள் ஆபீஸ் கேண்டீனில்—

''என்ன ஸார், ரொம்பக் குஷாலா இருக்கிறீங்க?'' என்று அகௌண்டண்ட் ஆனந்தரங்கத்தைக் கேட்டான் செந்தில்.

''மகள் வந்துட்டுப் போனாள்'' என்றார் வாயெல்லாம் பல்லாக.

''யாரு செண்பகமா? போன வருஷம் தானே கல்யாணம் கட்டிக் கொடுத்தீங்க?''

''ஆமா.... அவளேதான்... வேலைக்குப் போகிறாளே!''

''ஏங்க, மருமகப்புள்ளே ஒண்ணும் சொல்லலையா?''

''காப்பி சாப்பிடும்... ஆறிடப் போறது. ம்.... என்ன கேட்டீங்க... என் மருமவப் புள்ளே தங்கமாச்சே! அவர் வற்புறுத்தித்தான் இவளை வேலைக்கு அனுப்பிச்சாராம்.''

செந்திலுக்கு என்னவோ போலிருந்தது.

அவர் தொடர்ந்தார்: '' என் பொண்ணு, நான் அவள் கல்யாணத்திலே பட்ட கடனைச் சொல்லி யிருக்கு போலிருக்கு. என் மருமவப்புள்ளேக்குக் கஷ்டமா யிருந்திருக்கு. அதனாலே செண்பகத்தை வேலைக்குப் போகச் சொல்லி யிருக்காரு. மாசா மாசம் இவள் சம்பளத்திலே வள்ளிசா இருநூறு கொண்டு வந்து கொடுத்திட்டுப் போகிறாள்.''

செந்திலுக்கு வயிற்றில் சங்கடம். கான்டீன் பஜ்ஜி. உள்ளத்தில் நெருடல்.

மனைவியை வேலைக்கு அனுப்பித் தந்தைக்குக் கடன் அடைக்க உதவும் மாப்பிள்ளை அங்கே.

பணம் போதாமல் பெண்ணை வேலைக்கு அனுப்பிவிடாதே, பிடி ரூபாய் என்று சொல்லும் என் மாமனார்....

செந்தில் தீர்மானம் செய்து கொண்டான். மாமனாருக்குக் கடிதம் எழுதிப் பணத்தை நிறுத்தச் சொல்லி... மீனாவைச் சமாதானப் படுத்தலாம்.... அவன் முகத்தில் தெளிவு பிறந்தது.

ஆனந்தரங்கம், செந்தில் நகர்ந்தவுடன், தம் சட்டைப் பையைப் பார்த்தார்.

உள்ளே மகள் கொடுத்துவிட்டுப் போன கவர் இருந்தது. எடுத்தார்; பிரித்தார். உள்ளே கடிதம்.

''அப்பா, நேரில் பேசக்கூட வெட்கமாயிருக்கிறது. என் கணவர் குதிரைப் பந்தயத்தில் குதிரையின் கால்களில் என் வளையல்களையும், சங்கிலியையும் மாட்டிவிட்டார். வீட்டில் ரொம்பக் கஷ்டம். இந்த அழகில் நான் முழுகாமல் இருக்கிறேன். ஏதாவது உதவி.... அரிசியோ, பணமோ...''

ஆனந்தரங்கம் மனத்துக்குள் அழுதார். செந்திலிடம் ஏன் பொய் சொன்னோம் என்றிருந்தது அவருக்கு.

அந்தப் பொய் செய்த மாற்றம் அவருக்குத் தெரிய நியாயமில்லைதான்!



# தகடுகள் டிஸ்க்ராலாக இருந்தால் உங்களால் சேதம் பண்ண முடியாது



பெரும் வாரியான முக்கிய தொழில் சாலைகளுக்கான இரும்பு, நிலக்கரி மற்றும் பிரத்யேக தாதுப் பொருள்களை பெருமளவு கையாளுவதற்கு டிஸ்க்ரால் தகடுகள் மிகவும் உகந்ததாக இருக்கின்றன. டிஸ்க்ரால் தகடுகளின் பயனை எரிக்கவாய்—கூடைகள், தடுப்புத் தகடுகள், மதகுக்கதவுகள், வேகமாக அசைகின்ற தகடுகள், தானிய இயந்திரங்களில் உபயோகிக்கும் பிரத்யேக தகடுகள், சுத்தியல் மில்கள் போன்ற இடங்களில் நன்கு காணலாம் .... முரட்டுத்தனமான உபயோகிக்கும் இடங்களிலும், தேய்வின் பயங்கரம் அதிகமாக உள்ள இடங்களிலும் டிஸ்க்ரால் மிகவும் பயன் படுகிறது.

பிரத்யேக தேய்வுத்தடுப்பின் திறத்தினாலும், புத்திசாலித்தனமான உலோகக்கலவையால் செய்யப்பட்டதாலும், டிஸ்க்ரால் தகடுகள், கீறல்களாலும், அரைத்தூள்களாலும், அல்லது வெட்டுதலாலும் ஏற்படுகின்ற சேதத்தைத் தடுக்கின்றன. இதன் பயன், அடிக்கடி இயந்திரங்களின் பாகங்களை மாற்றும் நிலைமையையும், அநாவசியமான நேரச்செலவுகளையும், பணச்செலவுகளையும் தடுக்கிறது. எல்லாவற்றைக் காட்டிலும் டிஸ்க்ரால் கருவிகளை உருவாக்குவதில் எளிமையையும் உறுதியையும் இணைக்கிறது. தகடுகளின் இணைப்பு, இயந்திர வேலைப்பாடு, வெட்டுதல், துளையிடுதல் மற்றும் வளைத்தல், எல்லாம் எளிது. உங்களுக்கு வேண்டுமோ?

**மேலும் விவரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதவும்:**

- டைரக்டர் ஆப் மார்க்கெட்டிங்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
  43, சௌரங்கி ரோடு, கல்கத்தா-700 071
- ஜாயிண்ட் சீப் ஆப் புரொடக்ஷன் கண்ட்ரோல்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
  ஜம்ஷெட்பூர் 831 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
  நியூ இந்தியா அஷ்யூரன்ஸ் பில்டிங்
  87, மஹாத்மா காந்தி ரோடு
  பம்பாய் 400 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
  பேங்க் ஆப் பரோடா பில்டிங்
  16, பார்லிமெண்ட் ஸ்ட்ரீட்
  புது டெல்லி 110 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
  20ஜெ, மஹாத்மா காந்தி ரோடு
  பெங்களூர் 560 001
- சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்
  தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
  பார்க் சென்டர், 24 பார்க் ஸ்ட்ரீட்
  கல்கத்தா 700 016

TATA STEEL

**டாடா ஸ்டீல்**

TIS 3163R2



# பாலுறவு பற்றிய அறிவு!

## டாக்டர் பேசுகிறார்

பெண்களும் பையன்களும் சேர்ந்து படிக்கலாமா? அது நல்லதா? விபரீதங்கள் நடந்து விடாதா? எனக் கேட்போர் அதிகம். என்னைக் கேட்டால் சேர்ந்து படிப்பது நல்லது தான் என்றே சொல்வேன். பய முறுத்தலோடு பிரித்துப் பிரித்து வைப்பதால் தான் குழந்தைகளிடம் அந்தக் கட்டுப் பாட்டை முறிக்கும் வேகம் எழுகிறது.

சுமார் பதினேழு முதல் இருபது வயது வரை பெண்களுக்கு ஒரு தடுமாறும் நிலை. அந்த வயதில் விஷயங்களை எப்படி எப்படியோ தெரிந்துகொள்ள விடுவது நல்லதல்ல. கதை களைப் படிப்பதாலும் சினிமாப் படங்களைப் பார்ப்பதாலும் ஏதோ ஓர் உடல் பசியைச் சொல்லத் தெரியாத ஒரு தேவையை உணர் கிறார்கள். அவசரத்தில் ஒரு முடிவுக்கு வந்து விட்டால் அதன் பின் விளைவுகள் என்ன என் பது தெரியவாய்ப்பில்லை. சற்று அயர்ந்தால் யாரோ ஒருவனுடன் ஓடிவிடுவது அல்லது நட்பு வைத்துக் கொள்வது என்பது நிகழ்ந்து விடுகிறது; பிறகு வருத்தப் படுகிறார்கள்.

சிறு வயது முதல் ஒரு பெண்ணை ஒரு ரிக்ஷாக்காரன் பள்ளிக்கு அழைத்துச் சென்றான். அந்தப் பெண் பெரியவளானாள். தொடர்ந்து அந்த ரிக்ஷாவிலேயே போய்க் கொண்டிருந்தாள். சில மாதங்களுக்குப் பிறகுதான் அவர்களுக்குள் நட்பு வளர்ந்து அது பயங்கர முத்திரையைப் பதித்திருக் கிறது என்பது தெரிந்தது! இந்தப் பெண் அவள் செய்கைகளின் விளைவுகள் தெரியா மல் இதையும் ஒரு விளையாட்டாகக் கருதி இச்செயலில் ஈடுபட்டிருக்கிறாள். இந்த ரிக் ஷாக்காரனுக்குப் படிப்பு இருக்கிறதா? சமூக அந்தஸ்து இருக்கிறதா இல்லை, நல்ல வரு மானம்தான் இருக்கிறதா இவனோடு வாழ்க் கையைப் பிணைத்துக் கொள்ள முடியுமா? அது நீடித்து நிலைக்குமா என்றெல்லாம் சிந் திக்கவே இல்லை அவள். இதுபோன்ற நிகழ்ச்சி களை ஆராய்ந்து பார்க்கையில் செக்ஸ் பற்றிய பாடங்களை மாணவப் பருவத்தில் போதிப் பது அவசியம் என்றே முடிவுக்கு வரவேண்டி யுள்ளது.

'செக்ஸா? இந்தப் பருவத்தில் அதைச் சொன்னால் குட்டிச்சுவர்தான்!' என்று எண்ணுவோர் பலர் உண்டு. ஆனால் இதனால் ஆபத்து விளைவதை விட பெண்கள் ஆபத்தில் மாட்டிக் கொள்ளாமல் இருக்கவே உதவும் என்று நான் நம்புகிறேன். செக்ஸ் விஷயங் களைக் கண்ணியமான முறையில் நேர்த்தி யாகச் சொல்லித் தந்தால் எந்தப் புனிதமும் கெட்டுவிடாது. அந்த வயதினருக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கும்.

நாம் செக்ஸ் பற்றிய பாடம் வேண்டுமா எனக் கேட்கிறோமே ஒழிய இது நம் நாட் டில் பழக்கத்திலேயே இருந்து வந்திருக் கிறது. பெண் பெரியவளாக ஆனதும் அவளை உட்கார்த்திவிட்டுச் சில பாடல்களை அவளைச் சுற்றி உட்கார்ந்து பாடுவார்கள். இவை செக்ஸ் பற்றிய பாடல்கள்தாம். இப் போது இதைவிட நாகரிகமாக நாம் பாட மாகவே இரு பாலாருக்கும் பள்ளி இறுதி ஆண்டுகளில் போதிக்க - முடியும்.

செக்ஸ் பாடம் சொல்லிக் கொடுப்பதால் எல்லோரும் அதிலேயே மூழ்கி விடுவார்கள் என்றோ, பல பெண்கள் தற்காப்பு முறை களை அறிந்து சாமர்த்தியமாக அதைப் பயன்படுத்திக் கெட்டு விடுவார்கள் என்றோ எண்ணுவது பிரமை, மாறாக, கெட்டுப்போ கும் பெண்களின் எண்ணிக்கை குறையும். அதோடு திருமணமான பிறகு இல்வாழ்க்கை இன்பமாகவும்குடும்பம் அளவாகவும் ஆரோக் கியமாகவும் இருக்க உதவும்.

டாக்டர் சௌரி
ராஜனைப் பேட்டி
கண்டவர்
குயிலி ராஜேஸ்வரி



# புலியின் பசி

**அன்னம்**

பௌர்ணமியின் முழுநிலவு சாலையைத் துல்லியமாகக் காட்டியது. இதமான காற்று சுகமாக வீசியது.

அப்போதுதான் ''ஸர்வீஸு'' க்குப் போய் வந்திருந்த கார் வழுக்கிக் கொண்டு போயிற்று. இஞ்சினின் ஒலிகூடப் பிசிறு தட்டாத தம்புராவின் சுருதியாக ஒலித்தது.

ரவி ஆக்ஸிலேட்டரை அழுத்தினான். இன்னும் நான்கு கிலோமீட்டர்கள் தான். நகரத்துச் சந்தடியின் ஆரவாரத்தின் அடையாளங்கள் அவனை வரவேற்கும். கமலாவுக்கு மகிழ்ச்சி கலந்த திகைப்பாகக் கூட இருக்கும். பகலில் டெலிபோனில் பேசிய போது ஊர் திரும்ப ஒரு வாரம் ஆகும் எனக் கூறினான். அவள் சிணுங்கினாள். கோபித்தாள். தன்னைப் பற்றிய நினைவே அவனுக்குக் கிடையாது எனக் குறைப்பட்டுக் கொண்டாள்.

இன்னும் அரை மணி நேரத்தில் — அவள் பக்கத்தில் — அவன் சுட்டு விரல் அவள் கன்னத்தில் கோலமிட — அவன் விழிகள் அவள் சௌந்தர்யத்தில் திளைக்க — ஓ! அவன்தான் எத்தனை அதிருஷ்டசாலி!

கிரீச்!... டயர்கள் தரையில் தேய்ந்தன.

நல்ல வேளை. .... மனம் ஏதோ சிந்தனை வயப்பட்டிருந்தாலும் கால்கள் தங்கள் கடமையைச் செய்து விட்டன.

காரினால் மோதப்பட்டவன் கீழே விழுந்திருந்தான். ரவி காரின் கதவைத் திறந்து கொண்டு ஓடிப் போய் பார்த்தான். அவன் சுருண்டு கிடந்த விதம் ரவிக்கு அச்சத்தை அளித்தது.

கீழே விழுந்தவனுக்கு வயது முப்பது இருக்கும். ரவி அவன் மூக்கில் கை வைத்துப் பார்த்தான். மூச்சு சீராக வந்து கொண்டிருந்தது. சுற்றுப்புறத்தில் எந்த வீடும் இல்லை— ஆள் நடமாட்டம் தென்படவில்லை.

ஓரமாக இழுத்துப் போட்டுவிட்டு ரவி போய் விடலாம். ஆனால் ரவியின் மனம் இடம் தரவில்லை. இனிமேல் அவனுக்கு அந்த இரவு ருசிக்காது. கார் முன் விழுந்தவனது முகம் தான் மனத்தில் நிற்கும்.

அவனைத் தன் தோள் மேல் சாத்தியபடி ரவி மெதுவாகத் தூக்கினான். அத்தனை கனம் இல்லை. காரின் பின் கதவைத் திறந்து மெதுவாக ஸீட்டில் படுக்க வைத்தான்.

காரை மீண்டும் செலுத்த ஆரம்பித்தவன் நிதானமாகக் கொண்டு போய்த் தனக்கு அறிமுகமான ஒரு டாக்டரின் வீட்டுக்கு முன் கொண்டு போய் நிறுத்தினான்.

டாக்டர் தன் உதவியாளர்கள் இருவரை அனுப்பி வைத்தார். அவர்கள் அந்த மனிதனைத் தூக்கிச் சென்று ஒரு படுக்கையில் படுக்க வைத்தனர்.

டாக்டர் நீண்ட நேரம் பரிசோதித்து விட்டு நிமிர்ந்தார். அவர் முகத்தில் திருப்தியின் சாயல் தெரிந்தது.

''கவலைப்பட வேண்டாம் ரவி! அவன் பசியால்தான் மயக்கம் போட்டிருக்கான். உன் கார் அவனைத் தொட்டதாகக் கூடத் தெரியவில்லை.''

''எதற்கும் இந்த ஒரு இரவு அவன் இங்கு இருக்கட்டும். நாளைக் காலையில் நான் வந்து பார்க்கிறேன்!'' எனப் புறப்பட்டுப்போனான் ரவி.

மறுநாள் காலை. அந்த மனிதனுக்கு மயக்கம் தெளிந்திருந்தது. ரவிக்குத் தன் நன்றியைத் தெரிவித்தான். தன்னைப் பற்றிய விவரங்களைச் சொன்னான்.

பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவன். நல்ல சொத்து இருந்தது. அவன் தந்தை இருந்த வரை சுகபோக வாழ்வு. அவர் போன பிறகு எஞ்சியிருந்தது அவர் சாம்பலும், அவர் மலையாகச் சேர்த்து வைத்திருந்த கடனும் தான். செல்லமாக வளர்க்கப்பட்டவனுக்கு வயிற்றைக் கட்டத் தெரியவில்லை. பழைய ரீதியில் நடத்திய குடித்தனத்தில் எஞ்சியிருந்த சொத்தும் அழிந்தது.

அவனைக் கைதூக்கி விடத் தேவையான படிப்பும் இல்லை. உழைக்க உடலில் வலுவும் இல்லை. பிச்சை எடுக்கத் தன்மானம் தடுத்தது. ஒருவரிடம் போய்க் கை ஏந்த வறட்டுக் கௌரவம் குறுக்கே நின்றது.

அவன் சாப்பிட்டு மூன்று நாட்களாகின்றன. இரவில் டாக்டர் கொடுத்த ரொட்டியும் பாலும் அவனுக்கு அமிர்தத்துக்குமேலே!

ரவியும் கமலாவும் அவன் கதையைக் கேட்டு மனம் நெகிழ்ந்து போனார்கள்.

''ஏங்க! அப்பாவிடம் சொல்லி இவருக்கு ஏதாவது வேலை வாங்கித் தரலாம் இல்லீங்களா?'' எனக் கேட்டாள் கமலா.

ரவி தலை அசைத்தான். கமலாவின் அப்பா ஊரில் பிரபலமானவர். அவரால் எத்தனையோ பேருக்கு உபகாரம். கமலா நடந்ததை விவரித்தாள். அவரே ஆஸ்பத்திரிக்கு அரை மணியில் டெலிபோன் செய்தார்.

ஒரு விலாசத்தைச் சொல்லி அவ்விடம் ஒரு வேலை காலியாக இருப்பதாகவும், தங்கும் இடம் மற்றும் உணவு கூட இலவசம் என்றும் சொன்னார். ரவி எல்லா விவரங்களையும் அந்த மனிதனிடம் கூறிக் கைச் செலவுக்குப் பத்து ரூபாயும் கொடுத்து அனுப்பினான்.

அவன் போன பிறகு கமலா கேட்டாள்.

''அவர் பெயர் என்னங்க?... அதைக் கூட நாம் சரியாகக் கேட்கவில்லை!''

> தாயின் இதயம் என்றுமே வாடாத மலர்ந்த மலர்.
>
> - இத்தாலியப் பழமொழி



ரவி அங்கு மாட்டப் பட்டிருந்த ஓர் அட்டையில் எழுதப்பட்டிருந்த பெயரைப் படித்தான்.

''மார்க்கபந்து..... பொருத்தமானபெயர் தான். நமக்கு வழியில் கிடைத்த சொந்தம் தான்!'' எனச் சிரித்தான்.

●

**ம**றுநாள் ரவிக்கு ஒரு கடிதம் வந்தது. பரிச்சயம் இல்லாத கையெழுத்து.

''வணக்கம். தங்கள் அன்புக்கு நான் என்றும் கடமைப்பட்டு உள்ளேன். நீங்கள் சௌகரியமான இடம். வேலை சிரமம் இல்லை. தங்க, சாப்பிட ஒரு குறைவும் இல்லை.

முதல் வேளை சாப்பிட என்னை அழைத்தார்கள். போய் உட்கார்ந்தேன். எதிரிலிருந்த சுவரில் ஒரு கடப்பைக் கல்லில் அந்தத் தர்மத்தைச் செய்த புண்ணியவான் பெயர் இருந்தது. என்னால் ஒரு கவளம்கூடச் சாப்பிட முடியவில்லை.

அதிலிருந்த அந்தப் பெயர் — மார்க்கபந்து முதலியார் — என் தாத்தா — அவர் ஏழை மாணவர்களுக்கு ஏற்படுத்தியுள்ள ஒரு நிதியின் அடிப்படையில்தான் அந்தத் தர்மம் நடைபெற்று வருகிறது.

என் மனத்தில் ஒரு பெருமை. நாம் நடத்தும் தர்மம் என்ற கர்வம் எழுந்தது. அதே சமயத்தில் நாம் கொடுத்ததை நாமே எடுத்துக் கொள்கிறோம் என்ற ஒரு குற்ற— அவமான — உணர்வு என்னை ஆட்கொண்டது. என்னால் சமாதானப் படுத்திக்கொள்ள முடியவில்லை.

என்னை மன்னித்து விடுங்கள். உங்களைப் போன்ற நல்ல மனிதர்கள் இன்னும் கிடைப்பார்கள் என்ற நம்பிக்கையில் நான் போகிறேன்.

உங்கள் அன்பு கிடைக்கப் பெற்ற
மார்க்கபந்து

''என்ன, அப்படியே திகைத்துப் போய் உட்கார்ந்து விட்டீர்கள்?'' என வினவினாள் கமலா.

''புலி பட்டினி கிடந்தாலும் கிடக்குமே தவிர புல்லைத் தின்னாது, கமலா.....'' என்றான் ரவி.

அவளுக்குப் புரியவில்லை. ●

# பொறியைத் தட்டியதுமே...

## திவ்யமான ஒளி பரவுகிறது



உங்கள் பூஜை அறைக்கு:
உன்னதமானதொரு விளக்கு!

## அழகு ஒளிர்ந்து சிரிக்கின்றது



வீட்டினுள்ளே காம்ப்டாலக்ஸ்
ஒளிரட்டும்...ஓ...அழகைத்
தனித்தொளிரச் செய்யும்
அதன் பாங்கே சிறப்புத் தான்!

PE-I-4087



காம்ப்டாலக்ஸ், எடுத்துப்பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ, விசேஷ இணைப்புகளோ தேவையில்லை. பொறியைத் தட்டுங்கள். வேண்டிய வெளிச்சம் உடனே பரவட்டும்.

PHILIPS

PHILIPS 50

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

**பிலிப்ஸ்**

பம்பாயில் கூடிய காரியக்கமிட்டி டாக்டர் ராஜனைக் கண்டித்ததில் அதிசயமில்லை. அதற்கு முன்பே அவர் தமது மத்திய சட்ட சபை அங்கத்தினர் பதவியை ராஜினாமாச் செய்து விட்டிருந்தார். ஆனால் தமது நடத்தை பற்றி அவர் வருத்தப்படவில்லை. ஓர் அறிக்கையில் அவர் சொன்னார்:

''இந்தச் சம்பவத்தின் உச்ச கட்டம் தென் இந்தியாவின் மிகப் பெரிய காங்கிரஸ் தலைவர் ஒதுங்கி ஓய்வு பெறுவதுதான். அவர் தமது காரியங்களுக்கான காரணங்கள், நோக்கங்களில் காண்பித்து வரும் விசுவாசத்தையும், சத்திய உணர்வையும் அவரது தீவிர எதிரிகள் கூட என்றுமே வியந்து போற்றி வந்திருக்கின்றனர். எனக்குத் தகுதியற்ற அளவில் அவர் என்னிடம் காண்பித்து வந்துள்ள அன்பு அவர் ஓய்வு பெறுவதற்குக் காரணமாயிற்றே என்பதுதான் எனக்கு ஆழ்ந்த வருத்தத்தை அளிக்கிறது. அவருடன் எனக்கு இருந்து வந்துள்ள இருபதாண்டு தொடர்பில் ஒரு தடவை கூட நான் அவர் கட்டளையை மீறி நடந்ததில்லை.''

ஸி. ஆர். கலந்துகொண்ட காரியக் கமிட்டிக் கூட்டத்தில் பட்டேல், பிரசாத், நேரு ஆகியோர், ஸி. ஆரிடம் தங்கள் ஆட்சேபணைகளைத் தெரிவித்தார்கள். சென்னையில் பிரகாசம், சத்தியமூர்த்தி போன்றவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சி போலவே இதுவும் பயனற்றுப் போயிற்று. பம்பாய் செல்லும் வழியில் வார்தாவில் ஸி. ஆர். மகாத்மாவைச் சந்தித்திருந்தார். அவர் ஸி. ஆரின் தீர்மானத்தை மாற்ற முயலவில்லை என்பதால் ஒப்புக்கொண்டதாகவே தோன்றுகிறது.

காரியக் கமிட்டி, ஸி. ஆரின் மனத்தை மாற்ற முடியாமல் தோல்வியை ஒப்புக்கொண்டது. ஸி. ஆர்., தாம் காங்கிரஸ்காரராகவே தொடர்ந்து இருப்பதாகவும் ஆனால் காங்கிரஸ் அரசியலில் தாம் பங்கு பெறப் போவதில்லை என்றும் அறிவித்தார்.

• • •

ஸி. ஆரின் முடிவு துரிதமானது. மகாத்மாவின் தீர்மானம் ஆழ்ந்த யோசனைக்குப் பின் உருவாவது. நிகழ்ச்சிகள் பல சந்தர்ப்பங்களில் ஸி. ஆரின் முடிவுகளை நிர்ணயித்தன. காந்தி ஆன்மாவின் குரலை நாடினார். ஒரு முடிவுக்கு வந்து காரியத்தில் இறங்கிய பிறகு மகாத்மாவின் மனம் சாதாரணமாக அமைதியுற்றே இருந்தது. ஆனால் ஸி. ஆர்., முடிவெடுத்த பின்னரும் சந்தேகங்கள் அடிக்கடி எழுந்து அவரைத் தொந்தரவு செய்தன.

சமீபத்திய தமது முடிவுக்குப் பிறகு அவர் மாறி மாறி அமைதியுற்றும் இருந்தார்; மனச் சங்கடம் அடைந்தும் வந்தார். காரியக் கமிட்டி சகாக்கள் தம்முடன் ஒத்துப் போகவில்லை என்ற உண்மை அவரைக் கலங்க அடித்தது. புலாபாய் தேசாயிடம் ஒரு விகாரமான நெருக்கடி தம்மைப் பாதித்து விட்டது என்று அவர் சொன்னார். தமது கடமையைச் செய்ததாக அவர் நம்பிய போதிலும் அதே நேரத்தில் தமது சகாக்களைக் கைவிடுவது போன்ற உணர்வு தமக்கு ஏற்படுவதையும் அவரால் தவிர்க்க முடியவில்லை. தேசாயிடம், ''எனது விஷமத்தனத்தை நீங்கள் ஈடுகட்டிவிடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

இருப்பினும் சென்னை திரும்பிய பிறகு தமிழ் மக்களிடம் ''என்னைப் பற்றிய நினைப்பின்றித் தொடர்ந்து பணியாற்றுங்கள்'' என்ற அறிவுரை வழங்கினார். தமது இந்த நடவடிக்கை, பரஸ்பர நம்பிக்கைக்கும் சுய நம்பிக்கைக்கும் வழி வகுக்கும் என்று தாம் நம்புவதாகவும் தெரிவித்தார்.

''நீங்கள் இனி என்ன செய்வீர்கள்?'' என்று அவரைக் கேட்டபோது, ''அரசியல் தவிர வாழ்க்கையின் வேறு சில அம்சங்களிலும் எனக்கு ஈடுபாடு இருக்கிறது'' என்று உறுதியோடு பதிலளித்தார். ''உடனடியாக நான் நோயுற்றிருக்கும் சிலரைக் கவனிக்க வேண்டியவனாய் இருக்கிறேன். (அவர்களில் ஒருவர் அவரது இரண்டாவது மகன் ராமசுவாமி.) வேலை வெட்டியின்றிச் சோம்பியிருந்து நான் செத்துவிடப் போவதில்லை. உண்மையில் பார்க்கப் போனால் என் ஆன்மா அடங்காத ஆசையோடு வேண்டிய பல விஷயங்களுக்கு எனது அரசியல் ஈடுபாடு காரணமாக எனக்கு நேரமே இருந்ததில்லை. இப்போது அவற்றுக்கு நேரம் கிடைக்கும்.''

அதிர்ச்சி வைத்தியம் செய்ய வேண்டும் என்பது மட்டுமல்ல அவர் நோக்கம். ஒரு மாறுதலுக்கும் ஆன்ம பரிசோதனைக்கும் தம் மனம் ஆசைப்படுவதை அவர் சென்ற ஆண்டு தீவிரமாக உணர்ந்தார். அது இன்னும் அவரை முற்றிலும் விட்டபாடில்லை.

அரசியலிலிருந்து விடுபட்ட ஸி. ஆர். ஓராண்டுக்கு முன் தாம் கீதை பற்றி எழுதிய நூலில் இங்குமங்கும் சில அபிவிருத்திகளைச் செய்து முடித்தார். ''பகவான் கிருஷ்ணனின் வார்த்தைகள் ஏதோ படை திரட்டும் அதி

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு



ராஜ்மோகன் காந்தி-

காரியின் அலங்காரச் சொற்பொழிவு அல்ல'' என்று அவர் வற்புறுத்தினர்.

அவர் சிறுகதைகள் எழுதினர். உபநிஷதங்கள்பால் கவனத்தைத் திருப்பினர். அவற்றின் தொன்மையான படைப்பாசிரியர்கள் சமீப காலத்திய விஞ்ஞானிகள் போலவே ஆக்கபூர்வமான சந்தேகங்களால் ஊக்குவிக்கப்பட்டிருக்கின்றனர் எனக் கண்டார். அவரைப் பொறுத்தமட்டில் உபநிஷதங்களின் ஜீவனுன உபதேசம்: ''நல்லது என்பது வேறு, சுகமானது என்பது வேறு. அறிவாளிகள் சுகமானவற்றின் கவர்ச்சியினல் ஏமாந்து விடுவதில்லை. நல்லனவற்றையே நாடுவார்கள். முட்டாள்கள் சுகமானவற்றினல் மட்டும் ஈர்க்கப்பட்டு அழிகிருர்கள்.''

மகாதேவ தேசாய்க்கு வி. ஆர். எழுதினர். ''ராமாயணம், மகாபாரதம் உள்பட பெரும்பாலான நம்முடைய புராணக் கதைகள் எல்லாமே உயர் தத்துவங்களை உள்ளடக்கிய உருவகங்கள்தாம் என்று பாபுவோடு சேர்ந்து நானும் நம்புகிறேன். ஆனல் ஒரு புத்தகம் முழுவதும் சீராக ஒரே உருவகம் இழையோடுவதாக நிரூபிக்கச் சில சமயம் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதில் எனக்கு நம்பிக்கை இல்லை. தனித் தனியான மதிப்பு மிக்க உருவகங்களின் தொகுப்பு என்றே நான் கருதுகிறேன்.''

இதற்கிடையில் காங்கிரஸ் தனது கொள்கை — செயல் திட்ட அறிக்கையை வெளியிட்டு விட்டது. ''அது பதவி ஏற்குமா?'' — அது பின்னர் தீர்மானிக்கப்படும் என்றது அறிக்கை. கான் அப்துல் கஃபார் கான் விடுவிக்கப்பட்டு விட்டார். வருகிற ஆண்டுக்கான காங்கிரஸ் அக்ராசனரைக் கண்டுபிடிக்க வேண்டிய தருணம் வந்து விட்டது. ஜவாஹர்லால் தாம் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுவதில் தமக்கு ஆட்சேபணை இல்லை என்று கூறினர்.

ஓய்வு பெற்றதன் மூலம் வி. ஆர். காங்கிரஸ் அக்ராசனர் ஆகும் வாய்ப்பை இழந்து விட்டது போல் தோன்றியது. ஆனல் உண்மையில் அப்படித்தானு? ஒருவர் அக்ராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட அவர் ஏதேனும் ஒரு மாகாணக் கமிட்டியிலோ அல்லது தேசியக் குழுவிலோ அங்கத்தினராக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை என்று எடுத்துக் காட்டப்பட்டது. காங்கிரஸில் அடிப்படை அங்கத்தினராக இருந்தாலே போதும். வி. ஆர். இன்னமும் அதை விடவில்லை.

வி. ஆர். கிரீடத்தை அணிய வேண்டும் என்பதில் இருவர் மிகவும் ஆர்வத்தோடு இருந்தனர். வி. ஆருக்கு இந்தக் கௌரவம் நீண்ட காலம் முன்பே அளிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கருதிய பட்டேல் அவர்களில் ஒருவர். வி. ஆர். அப்பதவிக்குப் பிரேரேபிக்கப் பட்டால் ஜவாஹர்லால் தமது பெயரை வாபஸ் பெற்றுக் கொண்டு விடுவார் என்பதும் பட்டேலுடைய இந்த விருப்பத்துக்கு ஒரு காரணம். மற்ருெருவர் சத்தியமூர்த்தி. அவர் நீண்ட காலமாகவே, காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்ற கொள்கையை ஆதரித்து வந்தவர். வி. ஆர். அக்கிராசனர் ஆனல் காங்கிரஸ் நிச்சயம் பதவி ஏற்கும் என்று அவர் எண்ணினர்.

சத்தியமூர்த்தி மகாத்மாவுக்கு எழுதினர். பட்டேல் நேரில் பேசினர். காந்தி சத்தியமூர்த்தியின் கடிதத்தையும் இணைத்துப் பின்வருமாறு வி. ஆருக்கு எழுதினர்:

''அன்புள்ள வி. ஆர்...... சத்தியமூர்த்தியின் கடிதத்தைப் படித்துவிட்டு எனக்கு உங்கள் முடிவைச் சொல்லவும். சர்தார் தாங்கள்தான் முன் கிரீடத்தை அணிய வேண்டும் என்பதில் துடியாக இருக்கிருர். நீங்கள் மறுத்துவிடக் கூடாதே என்று கவலைப்படவும் செய்கிருர். இதை நான் கூறத் தேவையே இல்லை. உங்களுக்கே தெரிந்தது தான்.

''நீங்கள் ஒப்புக்கொள்வீர்களானல் நான் மகிழ்வேன். ஆனல் உங்களை வற்புறுத்த என் மனசு இடம் தரவில்லை. உங்களை வற்புறுத்தினல் இந்தச் சுமையைத் தாங்குவீர்கள் என்ற எண்ணம் நேரடியாகவோ மறைமுகமாகவோ சர்தாருக்கு ஏற்படுமாறு நீங்கள் நடந்து கொண்டிருந்தீர்களானல் இப்போது தயக்கமின்றி நீங்கள் 'சரி' என்று கூறவேண்டும். அதன் மூலம், நீங்கள் பொறுப்பேற்க முன் வரவேண்டுமே என்று சர்தாரைப்போலவே கவலைப்பட்டுக்கொண்டிருக்கிற பலரது வேதனைகளுக்கு முடிவு கட்டவேண்டும். அன்புடன் பாபு.''

வி. ஆர். ஒப்புதலளித்துப் பதில் எழுதவில்லை. அவர் விரும்பியிருந்தால் கூட அவரால் அப்படி எழுதியிருக்க முடியாது. ஓய்வு பெற்றுக் கொண்டதாகச் சொல்லி மூன்று மாதங்களுக்குள் அவரால் அவ்வாறு எவ்விதம் எழுத முடியும்?

பட்டேல் அக்ராசனர் பதவிக்கு நிற்க வேண்டும் என்று அவரது ஆதரவாளர்கள் வற்புறுத்தினர். அவர் மறுத்து விட்டார். 'காங்கிரஸ்காரர்களைப் பிளவு படுத்த விரும்பவில்லை' என்றுகூறி நேருவே மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று கோரினர்.

(தொடரும்)

**தமிழாக்கம்: வெ. ராஜேந்திரன்**

---

''எங்க பாட்டிக்குப் பிடிச்ச ஊர் எது தெரியுமா?''
'!மடிப்பாக்கம்!''
''பிடிக்காத ஊர்?''
''விழுப்புரம்!'' — எஸ். கோபாலன்



# அஃறிணைக் கவிதைகள்

'புவனாசந்திரன்'

### குறை

உங்கள் வீட்டை
அழகு படுத்துங்கள்
தவறில்லை
என்னை ஏன்
அசுத்தப் படுத்துகிறீர்கள்
— குறைப்பட்டது குப்பைத்தொட்டி!





### ஸீலிங் ஃபேன்

சாடியது ஸீலிங் ஃபேன்
ஏ மனிதா,
இப்படியா நீ
நிலை கெட்டிருப்பாய்?
சுவிட்சைப் போட்டுவிட்டுச்
சுழன்று தொலைப்பது ஏன்?

### கொழுப்பு

''ஆயுள் சிறை பெற்ற
அடிமை தானே நீ!''
என்று கொக்கரித்த
ஸீலிங் ஃபேனைப் பார்த்து
சொன்னது டேபிள் ஃபேன்:
''இந்தக் கொழுப்புக்குத்தான்
தலை கீழாய் உன்னைத்
தொங்க விட்டான் மனிதன்!''







### எட்டிப் பார்த்தது!

கோயிலுக் களித்த
ட்யூப்லைட்...
உபயதாரர்
பெயர் விலாஸம் போக
எஞ்சியிருந்த இடுக்கு வழியே
எட்டிப்பார்த்தது
— வெண்மையாய்!

### மறித்தல்

கர்ப்ப கிரஹத்தில்
ஸ்வாமி நினைப்பில்
லயிக்கும் மனத்தை
இழுத்துப் பார்க்கும்
— வெளியில் விட்ட
புதுச் செருப்பு!



# கற்பனைக் கேள்வி பதில்!

இன்று பெரும்பாலான பத்திரிகைகள் கேள்வி-பதில் பகுதியை வெளியிடுகின்றன. "மிக மிக மடத்தனமான காரியத்தினைத் தற்போது செய்துகொண்டிருப்பவர் யார்?" என்ற கேள்வி கேட்டால் அவர்கள் எவ்வாறு பதிலளிக்கக் கூடும் என்பதற்கான கற்பனை இதோ:



## மணிவண்ணன் பதில்கள்

மணிவண்ணன் பதில்கள்: இந்தக் கேள்வி இந்திய மக்கள் மீது தங்களுக்கிருக்கும் இழிவான அபிப்பிராயத்தையே காட்டுகிறது. உலக நாடுகள் பலவும் வேகமாக வளர்ந்து வருகிற நிலையில், நமது பாரத கண்டத்தில் கட்சிப் பூசல்களும், இனவெறி, மொழி வெறிகளும், ஒற்றுமையின்மையுமே பெரிதாகப் பல்கிப் பெருகி, நாட்டைத் துண்டு துண்டாக்கிக் கொண்டிருக்கிற வேளையில், "புத்திசாலித்தனமான காரியத்தைச் செய்து கொண்டிருப்பவர் யார்?" என்று கேட்பதே பொருத்தமாக இருக்கும். ஜப்பானைப் பார்த்துப் பெருமூச்சு விடுவதோடு நிறுத்திக்கொண்டால் முன்னேற்றம் எங்கிருந்து வரும்?'



பராசக்தி: அதி முட்டாள்தனமான காரியம் செய்வதில் என்றுமே முன்னணியில் நிற்கிறவர்... வேண்டாம், பாவம்! விட்டு விடுவோம்!



துக்ளக்: சாட்சாத் அடியேன்தான்! பெரும்பான்மையான இடங்களைப் பிடித்து வெற்றிவாகைசூடிக்கொண்டிருக்கிற அன்னை மாதா தாயாரின் கட்சியில், அத்தனை கட்சியிலிருந்தும் அரசியல்வாதிகளின் கூட்டம் விழுந்தடித்துக் கொண்டு சேருகிற நேரத்தில் இன்னமும் விடாப் பிடியாக நான் மட்டும் எதிர்த்துக் கொண்டிருக்கிறேனே! இதை முட்டாள்தனமான காரியம் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது? ஆனாலும் இதே முட்டாள்தனத்தையே என்றென்றும் இறைவன் என்னிடம் தங்க வைத்திருப்பானாக!

கடுகு: என்னய்யா மறைமுகமாகத் தாக்குகிறீர்? எனக்குப் புரியாதென்று நினைத்தீரா? வேலை வெட்டியத்த பயல்களெல்லாம் கேள்வி பதில் எழுத வந்துவிட்டானே என்ற எண்ணமா உமக்கு?



கல்கண்டு ஜூனியர்: இந்தக் கேள்வி கேட்ட நீரும், இதற்குப் பதில் சொல்கிற நானும்!

## அரசு பதில்கள்

அரசு: ஒரு கதை நினைவுக்கு வருகிறது! சிறு வயதில் படித்த ஞாபகம். தந்தையின் சொல்லை மீறாத பிள்ளை. கப்பலில் பிரயாணம். கப்பலின் உச்சியில் தீப்பிடித்துக் கொண்டது. பையனைத் தான் வருகிற வரையில் எங்கும் போகாதே என்று சொல்லிவிட்டுத் தீயை அணைக்கப் போன தந்தை அங்கேயே இறந்துவிட்டார். தீ வெகுவாகப் பரவிவிட்டது. இனி கப்பலைக் காப்பாற்ற முடியாது என்ற நிலையில் மாலுமிகள் அலை வரும் கடலில் குதித்துத் தப்பித்தார்கள். பையனையும் அழைத்தார்கள். தந்தையின் வாக்கினை மீறக் கூடாது என்பதில் உறுதியாக இருந்த அவனும், அத்தீயிலேயே மாண்டு போனான். அவன் செய்தது மடத்தனமான காரியமா இல்லையா என்பது பற்றிக் கூட சில வருடங்களுக்கு முன்னால் சர்ச்சை எழுந்ததாக நினைவு. ஆமாம்! நீங்கள் என்ன கேட்டீர்கள்?



மணியன்: அன்புள்ள நண்பரே! அது நிச்சயமாக நீர் இல்லை! திருப்திதானே?



சாவி: கலைஞருடன் ஒருமுறை பேசிக்கொண்டிருந்தேன். "உதிர்ந்து போன இரண்டே இரண்டு இலைகளை வைத்துக்கொண்டு, சூரியனுடைய ஒளியினைத் தடுத்து நிறுத்திவிடலாம் என்று மனப்பால் குடிக்கிறார்களே சிலர்; அவர்களை எந்த வரிசையில் சேர்க்கலாம்?" என்று கேட்டேன். ஏதோ ஓர் அர்த்தத்துடன் புன்னகைத்தார். அது என்ன அர்த்தம் என்பது உங்கள் கேள்வியைப் படித்த பின்தான் விளங்கியது.

- ஜ. இரவிப் பிரகாஷ்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேசியக் காசு









